பொதிகைமலையில் அமர்ந்து அருளிய

# அகத்தியர் ஆருடம்



மதி நிலையம் சென்னை-2

பொதிகைமலையில் அமர்ந்து அருளிய

# அகத்தியர் ஆரூடம்

[நட்சத்திர யோகம் பாய்ச்சிகை
சாத்திரம் அடங்கியது]

கவியாக்கம் :

புலவர் சுப. துளசி

தெய்வீக நூல்களின் சிறப்பு தயாரிப்பு
''வளர்மதி''

மதி நிலையம்
45, செல்லப் பிள்ளையார் கோயில் தெரு,
[அமீர்மஹால் சமீபம்]
இராயப்பேட்டை, சென்னை-600 014
போன் : 840265

நல்லோர் இதயத்தில் நீங்கா இடம்பெற்ற

# அகத்தியர் ஆரூடம்

## நன்மை தீமை அறியும் எண்கள்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 48 | 10 | 13 | 59 | 51 | 16 | 8 | 45 |
| 50 | 57 | 53 | 17 | 64 | 54 | 63 | 9 |
| 4 | 24 | 43 | 20 | 29 | 61 | 27 | 2 |
| 34 | 39 | 30 | 41 | 56 | 33 | 40 | 23 |
| 3 | 26 | 44 | 22 | 28 | 62 | 25 | 5 |
| 46 | 38 | 32 | 18 | 55 | 31 | 37 | 47 |
| 35 | 7 | 14 | 42 | 52 | 15 | 49 | 36 |
| 21 | 60 | 11 | 1 | 6 | 12 | 58 | 19 |

### காப்பு

பூவிலுள்ளோர் அகத்தியமா முனிவர் சொன்ன
புகலரிய ஆரூடந் தன்னை என்றும்
தேவையென என்றென்றும் மனத்தில் கொள்ள
தேவியருள் பெற்றதனால் திறமை மிக்கு
நோயகலப் பின்வருமோர் இன்பம் காண
நுண்மையிலும் நுண்மையென உண்மை சொல்லப்
போயகல இருளெல்லாம் உண்மை யாகப்
புகர்முகவன் திருத்தாளே போற்றி செய்வாம்

மலர் அரும்பு ஒன்று கொண்டு மேலே உள்ள சக்கரத்தின் எண் ஒன்றை பயபக்தியுடன் குலதெய்வத்தையும் இஷ்ட தெய்வத்தையும் தொழுது தொடவும். பின் அவ்வெண்ணிற்குரிய கவியைப் படித்துப் பலாபலன் அறியவும்.

1

மனமெட்டு மளவுக்கு மார்க்க முண்டு
மாற்றாக வேறேதும் சொல்ல வில்லை
புனமெட்டும் வள்ளியம்மை கேள்வன் செவ்வேள்
புரிகின்ற திருமணத்தின் துணைவன் யாரே
கணநாதன் அருளுண்டு தொழிலும் ஓங்கும்
கல்வியுடன் ஞானமது கூடும் மேலும்
தினமெட்டில் நோய்நீங்கும் பொருளும் சேரும்
தேர்ந்தகவி அகத்தியனார் கூறினாரே

உனக்கு ஒன்றாம் எண் ஆரூடமாக வந்ததால் கவலைகள் ஒழியும். தொழிலில் நன்மை ஏற்படுவதோடு மைந்தர்களின் கல்வியும் செழிக்கும். விரைவில் மனையில் மணம் கூடும். கைவிட்டுப் போன எப்பொருளாயினும் மீளுதலோடு நோயும் நீங்கும். ஸ்ரீமகா கணபதியின் கருணா கடாட்சமிருப்பதால் உன் மனைமாட்சி ஓங்கி சுகமும் நன்மையும் ஏற்படும். எட்டு தினங்களில் உன் எண்ணங்கள் வெற்றியடையும். கவலை வேண்டாம். இது உத்தமம்.

2

யாமிருக்கப் பயமில்லை என்பான் கைவேல்
யாவருக்கும் தெரியுமயில் துணையும் உண்டு
நோயிருக்கின் நீங்கிவிடும் கஷ்டம் நீங்கும்
கலிநீங்கும் கனபொருளும் சேருமப்பா
தாயிருக்கப் பயமென்ன என்ற பிள்ளை
தணிகையதன் நாதனது தயவால் தானே
வேயிருக்கும் இதழிடையன் வெட்டும் கேது
விருப்புடனே பத்துநாளில் விலகிப் போவான்

கடந்த ஓர் ஆண்டு காலமாக ஜன்ம கேது உன்னைத் தொல்லைக்காளாக்கினான். ஆனால் ஸ்ரீ சிவசுப்ரமணியக் கடவுளின் கிருபா கடாட்சம் உனக்கு உண்டு. அதனால் நீ நினைத்தவை வெற்றியாகும். கவலையும் துயரமும் ஒழியும். தொழில் மேன்மை புத்திரபாக்கியம் ஏற்படும். பிறரை ஆதரிக்கும் மேலான அருளும் பந்துக்களின் உதவியும்

சிறந்த பேரும் புகழும் ஏற்படும். இன்னும் 10 நாளில் கேது பகவானின் தொல்லை நீங்கி சுகப்படுவாய். இது உத்தமம்.

3

முப்புரத்தை எரித்தவரின் அருளினாலே
முன்னர்வரு நல்வினைகள் எண்ணிப் பாரே
எப்பொழுதும் எல்லாரும் உனக்கு அன்பாய்
இருக்கின்ற போதினிலே குறையொன்றேது
தப்பேதும் நேராது தொழிலில் லாபம்
தங்கிடுமே பிறர்உதவி உண்டு உண்டு
எப்போதும் குலதெய்வ பூசை செய்தால்
ஈடரிய காரியமும் முடியு மப்பா

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் கருணையினால் உனக்குக் கவலை ஏற்படாது. ஆன்றோர்களின் ஆசி உண்டு. தொழிலில் லாபம், தனவந்தர், அரசர் போன்றோரின் அரிய பெரிய சன்மானங்களை நீ அடைவாய். உன் எண்ணங்களுக்கு இடையூறு ஏற்படாது. குலதெய்வ பூஜையை மேற்கொண்டால் நீ நன்மை அடைவது உறுதி. இது உத்தமம்.

4

காலாலே உலகளந்த கருந்திருமால்
கண்பார்வை உனக்குண்டு அதிர்ஷ்ட முண்டு
நூலோர்கள் விவேகியென உன்னைச் சொல்வார்
நுவலறிய பொருள்சேரும் புத்ரர் உண்டு
மேலான கவலையென்ன? கவனம் வையேன்
மெய்யாக எல்லாமும் கிடைக்கு மப்பா
நாளான பதினோரு நாள்கள் போனால்
நாரணரின் அருளாலே நன்மை யுண்டே

உன் உள்ளத்தில் உள்ள கவலை நீங்கும். செய்தொழில் நீடித்துத் தனலாபம் ஏற்படும். பெரியோர்களின் நேசமும் ஆசியும் உனக்குப் பெரிய நன்மையை அளிப்பதோடு கடவுள் பக்தியும் தான தர்மங்களில் நாட்டமும் ஏற்படும்.

மணவாளப் பெருமானின் அருளாசியால் கெண்டாதி தோஷங்கள் விலகுதலோடு மனையில் ஆண்மகவு பிறக்கும். உன் மனக்கவலை 11 நாளைக்குள் நீங்கி நீ நன்மை அடைவாய். இது உத்தமம்.

5

உன்னுடைய துன்பமெல்லாம் ஒழிந்து போச்சு
உத்தமனே குருதிசையும் உதவி யாச்சு
உன்னுடைய தொழிலுனக்கு விருத்தியாச்சு
உற்றபெருங் கஷ்டமெல்லாம் ஒழிந்து போச்சு
உன்னுடைய எண்ணமெல்லாம் முடிவ தாச்சு
உந்தையரின் பொருள்சேரும் காலம் ஆச்சு
தன்னுடைய கடனென்று அஷ்ட லக்ஷ்மி
தான்றுணையாய் வருகின்றாள் முனிவன் சொன்னான்

குரு திசை இனி வருகிறது. எனவே உன் குடும்பத்தில் உள்ள குறைகள் எல்லாம் நீங்குவதால் கவலை ஒழியும். 18 நாளில் கைவிட்டுப் போன பொருளோ தொழிலோ கிடைக்கும். குடும்பத்தில் வழக்கு வம்பு நீங்கும். தென் மேற்குத் திசையிலிருந்து நல்ல செய்தி வருவதால் இன்பம் ஏற்படும். கைப்பொருள் நேர்ந்து கடன் திருதலும் நோய் நீங்குதலும் ஏற்படும். உன் எண்ணம் 18 நாள்களில் முடியும். இது உத்தமம்.

6

வாணியின் கருணையால் வாட்டிடும் கவலை நீங்கும்
விரைவினில் உனது எண்ணம் வியப்பினில் பலிதமாகும்
பூணணி சேர்தலோடு புத்திரப் பேறுமுண்டாம்
ஆமினி முன்னோர் சொன்னார் ஒரு திங்கள்கழியப் பாரே
ஆணியாம் வினைகள்எல்லாம் அப்பனே அற்றுப் போச்சு
அடுத்தினி விவாகமென்று அமையுது இன்னும் கேளு
காணரும் பகையும் கெட்டு கடுவழி நடக்கலாச்சு
கருதிடும் குடும்பத்தோர்கள் கலகமும் அற்றுப் போச்சே

கவலையின்றி நீ வாழக் கலைமகள் கடாட்சம் உனக்கு உண்டு. கருதியவை முடியும். களிப்புமிக நீ புத்திரப்

பேறடைவாய். உன் எதிரிகள் ஒழிவர். மனையில் விவாக காரியங்கள் நடக்கும். குடும்பத்தின் கஷ்டம் நீங்கி கவலை யொழியும். இதுவரை நீ பட்ட துன்பமெல்லாம் விலகி இன்னும் ஒரு மாதத்தில் இன்பமடைவாய். இது உத்தமம்.

7

திருவருளும் குருவருளும் உனக்கு உண்டு
தெளிவான எண்ணமெல்லாம் பொய்த்திடாது
அரியதொரு பாக்கியமும் அடைவாய் அப்பா
அவனியிலே புத்திரனைப் பெற்று வாழ்வாய்
வருமப்பா வெளியூரின் செய்தி ஒன்று
வகைதொகையாய் முடித்திடுவாய் வாழ்ந்து காட்டு
குருவுனக்கு ஒன்பதாம் வீட்டில் பார்வை
குறித்தவினை ஐந்து நாளில் வெற்றி காணும்

நீ நினைத்த எண்ணம் கவலையின்றிக் கைகூட குரு ஒன்பதாமிடத்தில் இருப்பதால் கைகூடும். குடும்ப செல்வாக்கு ஏற்படும். வெளியூரில் லாபம் ஏற்படுவதோடு நல்ல சேதியும் வரும். மனையில் ஆண்மகவு பிறக்கும். பந்துக்களின் விசேஷ உதவிகள் உண்டு. நாளுக்கு நாள் உன் எண்ணம் கைகூடும். 5 நாளில் நீ நினைத்த தெல்லாம் நடக்கும். இது உத்தமம்.

8

அவனியிலே துன்பமிக அடைந்திடாதே
அன்பில்லார் உறவெதற்கு விட்டுத் தள்ளு.
கவனமது சிதையாதே கருத்தே கொள்க
கவலையெல்லாம் போகுமிந்த வாரத்தோடே
புவனமதில் குடும்பசுகம் மிகுமே யப்பா
பிணிவிலகும் தொழில்பெருகும் தவறிடாதே
கவனமொடு மச்சமொன்று முதுகில் பாரே
காசினியில் புகழுடன் வாழ்வாயப்பா

தீக்கோள்கள் (தீயகிரகங்கள்) உன்னை இதுவரை துன்புறுத்தினவேனும் இப்போது சுபகிரகப்பார்வை பெறுவதால் உன் கவலையொழியும். இனி துன்பம் இல்லை. தீயோர்

நட்பைத் தவிர்க்கவும் பலவழிச் சிந்தனைகள் கூடாது. மனக் கவலை தீரும். தொழில் விருத்தியுண்டு. பந்து சுகம் உண்டு. மனையில் திருமண காரியம் உண்டு. ஒரு வாரம் போக நன்மையுண்டு. முதுகில் ஒரு மச்சமிருப்பதே இதற்கு அடையாளம். இது உத்தமம்.

9

தெய்வமென்று துணைநிற்கும் கவலை யில்லை
 தேர்ந்திடுவாய் செய்தொழிலில் லாபம் காண்பாய்
உய்விக்கும் பொருள் உனக்கு வந்தே சேரும்
 உள்ளமதை உருக்குகின்ற நோயும் தீரும்
கைவந்த தெய்வமெனப் பெண்பிறக்கும்
 கடைதாண்டிப் போனாரும் வந்து சேர்வார்
மெய்யினிலே இனித்துன்பம் இல்லை இல்லை
 மேதினியில் ஐந்துதினம் கழித்துப் பாரே

ஆண்டவன் அருளால் நீ எது செய்யினும் அதிக லாபம் அடைவாய். இனி நோய்த்துன்பம் இல்லை. கெண்டாதி தோஷங்கள் உன்னை அணுகா பகைத்துச் சென்றவரும் உறவு கொள்வார்கள். இந்நாளில் மனையில் பெண் மகவு உதிக்கும். பலவிதமான தொழிலும் உனக்கு பாக்கியத்தை ஏற்படுத்தும். 5 நாள் போக உன் எண்ணம் பலிதமாகும். இது உத்தமம்.

10

நல்லதொரு காலமுனக்கு உதவி யாச்சு
 நன்மையருள் சந்திரனும் ஜென்மம் பெற்றான்
வல்லதொழில் லாபமுண்டு பயமே யில்லை
 வாகான உன்மனதின் கவலை நீங்கும்
பொல்லாத குடிகெடுப்போர் நாச மாவார்
 புரிந்திடுவாய் பிறருக்கு நன்மை நீயே
நல்லதொரு மாடுமனை கொள்ள நன்றாம்
 நலிவில்லை விரைவில்தன லாபம் காணும்

ஜென்ம சந்திரன் செய்தொழில் லாபம் ஏற்படுத்தும். அது பெரும் அளவில் பெருகும். குடும்ப விருத்தியுண்டு.

மனக்கவலை நீங்கும். நீ நம்பியோரை ஆதரிக்கும் அமைப்பினை அடைவாய். இச்சகம் பேசும் நயவஞ்சகர்கள் நாசமடைவர். மாடு மனை கொள்ள பால்பாக்கியம் ஏற்படும், எண்ணியது முடியும்—இது உத்தமம்.

11

நினைத்தவெலாம் மனம்போல பலிக்குமப்பா
நின்மலரார் குருவுனக்கு ஆட்சியானார்
தினைத்துணையும் துன்பமில்லை செல்வமோங்கும்
திருமுருகன் அருளிருக்கப் பயமும் இல்லை
புணையெனவே பண்டைநாள் செல்வம் சேரும்
புகலிடத்தில் விவாகமது கூடும் கூடும்
நினைக்கஇது இருபத்துமூன்று நாளில்
நெருங்கிவரும் நல்லசெய்தி மகிழு வாயே

நீ நினைத்தது முடியும். துயரின்றி வாழ்வாய். உனக்கு செல்வாக்கு மிகுதியாகும், முன்னோர்களின் பொருள் சேருதலும் மனையில் திருமணம் கைகூடுதலும் ஏற்படும். நன்மையான செய்தி வெளியூரிலிருந்து வந்து மகிழ்ச்சியினை ஏற்படுத்தும். லாபமும் ஏற்படும். இன்னும் 23 நாளில் குரு ஆட்சியாவதால் அவர் தெசையில் நீ நினைத்த காரியங்களெல்லாம் பலன் தரும். இது உத்தமம்.

12

நன்மைதரு கிரகமெல்லாம் பகையே ஆகி
நலம்சேர்க்கும் குருகிரகம் மறைய லாச்சு
புன்மைதரு கலகமெல்லாம் குடும்பத் தாச்சு
கன்னியினால் மனைதனிலே விரோதமாச்சு
நன்றான தொழில்முறையில் நஷ்டம் ஆச்சு
நம்பினவர் கழுத்தறுக்கக் கஷ்டம் ஆச்சு
வென்றாலும் மனமதுவே மருக லாச்சு
வினைவழியே வாரமெட்டில் சுகமுண்டப்பா

உனக்கு நன்மை தரும் கிரகங்கள் எல்லாம் பகைப்பட்டன. குடும்பக் கவலை உண்டு. ஒரு பெண்ணால் கலகங்கள் உண்டு. தொழில் நஷ்டம் நம்பியவர்களால் ஏற்

படும் மோசம். அதனால் ஏற்படும் மனக்கஷ்டம் போன்ற பொல்லாப்புகள் உண்டு. இக்கவலையால் வந்த நோய் மேலும் பாதிக்கும். ஆனால் 27 நாள் நவக்கிரக பூஜை செய்ய நாளுக்கு நாள் கவலை குறைந்து காணப்படும். எட்டு வாரம் போன பின் துன்பம் நீங்கி சுகப்படுவாய்—இது மத்திபம்.

13

அகத்தியனார் வாக்கியத்தில் தவறொன் றேது
அப்பனே ஆத்திரம்நீ கொள்ள வேண்டா
இகத்தினிலே குலந்தழைக்கும் புத்திரரும் உண்டாம்
ஈடறிய மூத்தோர்கள் செல்வம் சேரும்
முகத்தெதிரே சினந்தவரும் சினேக மாவார்
முப்பதுநாள் சென்றாலே கண்டிடுவாய்
நகத்திலுறு சதைபோல உறவைக் காத்து
நல்லபடி வாழ்வாய்நீ முனிவர் சொன்னார்

நீ ஐந்து ஆண்டுகளாக மிகவும் சிரமப்பட்டிருக்கிறாய். நீ கலங்காதே—உன் கவலை இனி விலகிவிட்டது. குடும்பம் தழைத்தோங்கும். செல்வமும், புத்திர விருத்தியும் ஏற்படும். செல்வாக்கு மிகும். முன்னோர்களின் பொருள் வந்துசேரும். பகைவர் உறவாவர். வாக்கில் நேர்மையும், நாணயத்தைக் காப்பாற்றுதலும் உண்டாகும். வஞ்சகர்களை வாட்டும் வீரமும் வந்தவர்களை ஆதரிக்கும் இரச்கமும் உனக்கு உண்டாகும். ஒரு மாதம் போனால் உன் துன்பங்கள் நீங்கி அதிர்ஷ்டம் ஏற்படும். இது உத்தமம்.

14

ஆச்சப்பா வந்ததுநல்யோகம் தானே
ஆதரவே தருமப்பா தனலா பம்தான்
போச்சப்பா நோயெல்லாம் மணமே கூடும்
புகல்கல்வி மதலையர்க்குப் பொருந்தும் பாரே
போச்சப்பா குடும்பத்தில் கவலை இன்னும்
போனபொருள் கைவந்து சேரல் உண்மை
பேசப்பா பரம்பொருளை நன்மை நேரும்
பெற்றிடுவா யெல்லாமே நாளீரேழில்

"அப்பனே! இன்னும் இரு வாரங்கள் போனால் நீ நல்ல யோகமடைவதால் தனலாபங்களைப் பெறுவாய். மனையில் மணம் நடக்கும் சிறுவர் கல்வியோங்கும் வேண்டிய செல்வம் ஏற்படும். நோய் விலகும். ஆயுள் பலம் ஏற்படும். குடும்பத்தில் உள்ள கவலைகள் நீங்கிக் கொடுக்கல் வாங்கலில் லாபம் ஏற்படும். ஊரைவிட்டுப் போனவரும் அதிக லாபத்துடன் வந்து சேருவார்கள். நினைத்தவை நடக்கும். இன்றிலிருந்து நாளுக்கு நாள் சுகமே இது உத்தமம்.

15

ஐந்திலே பார்க்கவனும் ஆட்சி கொண்டான்
அல்லலெல்லாம் விலகிஓடி அருகிப் போச்சு
மைந்தனே நீபிறரைக் காத்தலாச்சு
மகராசன் தனவந்தன் எனப்பே ராச்சு
மைந்துடைய வஞ்சர்குலம் ஒழியலாச்சு
வஞ்சியினால் பொருள்சேரும் வழக்கம் போச்சு
முந்தியதோர் கண்டமெலாம் முடிவ தாச்சு
மூவெட்டு நாள்தனிலே அதிர்ஷ்டம் காணும்

சுக்கிர பகவான் 5ஆம் இடம் பெற்றதால் ஆதி முதல் இருந்த கவலைகள் நீங்கும். பிறர் உதவியின்றியே தன லாபங்களை அடைந்து பிறரை ஆதரிக்கும். பெருங் குணத்தைப் பெறுவாய். சின்னாளில் ஒரு கன்னியால் நிறைந்த செல்வம் சேரும். உன்னைக் கெடுக்க நினைத்த வர்கள் கெடுவார்கள். குடும்பத் தொல்லைகள் நீங்கும். நோய், கண்டம் நீங்கி ஆயுளுடன் வாழ்வாய். நினைத்தவை பலிக்கும். 24 நாள் போனால் யோகம் ஏற்படும். இது உத்தமம்.

16

இல்லத்தில் இருந்தாலும் இனிமை இல்லை
எல்லைவிட்டுப் போனாலும் சுகமே இல்லை
கள்ளமனம் பெற்றவரை நினைத்தல் தீமை
கருத்தினிலே நினைத்தவெல்லாம் கைகூடாது

நல்லபடி நடந்தாலும் உருப்படாது
நல்லதுணை மக்களுமே சொற்கேளாது
அல்லலது அகலாது உன்னை விட்டே
அப்பனே முப்பதுநாள் கழித்திடாயே

உனக்கு நன்மை செய்யும் கிரகங்கள் எல்லாம் கெட்டு இருப்பதால் இருக்குமிடத்தில் சுகமில்லை. வேறிடம் சென்றாலும் அதனால் லாபமில்லை. எண்ணியன நிறைவேறாது, மனைவி மக்கள் உனக்கு அடங்க மாட்டார்கள். குடும்பத்தில் அமைதியிராது. நன்மை செய்யினும் அந்நன்றியைப் பிறர் உணரார். இன்னும் 1 மாதம் வரையில் கஷ்டங்கள் உன்னைவிட்டு நீங்கா. கள்ள மனத்தவரால் சில நாளில் பல தொல்லைகள் விளையும். எச்சரிக்கையாக இருக்கவும்; இது மத்திபம்.

17

உள்மனதில் நினைத்தவெல்லாம் பலிக்குமப்பா
உயர்புவியில் சுகசேமம் அனுபவிப்பாய்
அன்பனே பகைநேர வாய்ப்பொன்றில்லை
ஆதரவாம் குடும்பமுடன் தொழிலும்தானே
முன்னோர்கள் பொருள்சேரும் உறவும் வாழ்த்தும்
முயன்றவெலாம் கிடைத்திடுமே முடிவு காண்பாய்
சின்னோயும் மருந்தாலே தீரும் தீரும்
செல்வனே வாரமது இரண்டில் தானே

நீ நினைத்த எண்ணம் பலன் தரும். என்றும் இன்பமாக வாழ்வாய். குடும்பத்தில் ஒரு விதமான பகையும் தொந்தரவும் இனியில்லை. பலதுறை லாபங்களோடு முன்னோர் பொருளும் வந்து சேரும். சுற்றத்தினர் உதவியும் நண்பர்கள் உதவியும் உண்டு. நோயானது மணி, மந்திர, மருந்துகளால் நீங்கும். 14 நாள்களுக்குள்ளாக மனக்கவலை முற்றும் நீங்கி நன்மை காண்பாய். இது உத்தமம்.

18

இரண்டதனில் கிரகமெல்லாம் உச்சமாச்சு
இலையென்ற நோய்நீங்கி இன்பமாச்சு
திரண்டபெரும் பிணியெல்லாம் மாறிப் போச்சு
தினம் வந்த தொல்லையெல்லாம் பறந்தே போச்சு
முரணுறவே பிரிந்தவரும் கூடலாச்சு
முன்னுதொழில் மகப்பேறும் உண்டாச்சப்பா
இருமூன்று நாளதனில் நன்மையாச்சு
இப்படித்தான் அகத்தியனார் இயம்பினாரே

இனி உன் கவலைகள் விலகும். குடும்பத்தில் இருந்த நோயும், வறுமையும் வம்பு வழக்குகளும் உடன் விலகும். கைவிட்டுப் போன பொருள் வந்தடையும். கிரகதோஷத்தால் பிரிந்து சென்றவரும் உன் நல்ல ராசியால் லாபத்துடன் மீண்டும் வந்து சேருவார்கள். வெளிநாட்டுச் சேதி லாபகரமானது. தொழில் விருத்தி புத்திர சம்பத்து உண்டு, நினைத்தவை முடியும் அதிர்ஷ்டம் மிகும். இது உத்தமம்.

19

பட்டதுன்பம் போதுமப்பா மறக்கொணாது
பலவற்றைக் கூறிடவும் யாரால் ஏலும்
கெட்டசதி செய்தார்கள் நிறையப் பேர்தான்
கேடடைந்தாய் அம்புவியில் மிக மெலிந்தாய்
திட்டமுடன் கேதுவுந்தன் ஜென்மம் விட்டு
நீங்குதலால் இருபத்தி ஒருநாள் போனால்
நட்டமிலை எதுசெய்யினும் பயமே இல்லை
நானிலத்தில் ஆட்சியுறு அஞ்சிடாதே

இவ்வுலகில் நீ இதுவரை பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. தாளம் படுமோ தறிபடுமோ என்றது போல் மிகுந்த அல்லலுக்கு ஆளானாய். குணமான குடும்பமோ விருத்தியான தொழிலோ உண்மையான பந்துக்களோ இல்லாது மிகவும் நாசமடைந்தாய். நோயின் தொல்லை

வேறு சில காலத்திற்குமுன் ஏற்பட்டு மனதை வாட்டியது. பரதேசி போல் திரியவும் நேர்ந்தது. ஆனால் அது ஒருவர் உதவியால் தவறியிருக்கலாம். ஜென்ம கேதுவாதலால் கடந்த இரண்டு ஆண்டுகளாக இத்தொல்லைகளை அனுபவித்தாய். அவன் 21 நாளில் மாறுகிறானாதலால் பின் சுகம் அடைவாய்.இது மத்திபம்.

20

நீரற்ற நிலம்போலக் கலங்கி டாதே
நேர்மையற்றோர் நேசமதைக் கொண்டிடாதே
தேருருண்டு நிலைசேரும் பயப்படாதே
தெளிகநீ தெய்வத்தை நிந்திக்காதே
கூறுகின்ற குடும்பத்தைப் பகைத் திடாதே
குருபலனும் வாரமூன்றில் வருந்தப்பாதே
நேருகின்ற நோய்நொடியால் தவித்திடாதே
நினைத்திடுநீ நவக்கிரக பூஜைசெய்யே

நீ நினைத்தது முடியாது. அலைச்சலும் கவலையும் விரையமும், தொழில் நஷ்டமும் உண்டாக்கும். ஆதலால் கபடர்களின் சகவாசத்தை உடன் அறுத்தெறி. அவர்கள் நல்லவர் போல் தோன்றி உன்னை வஞ்சிப்பர். இரகக் கோளாறால் பந்துக்களைப் பகைக்காதே. தெய்வ நிந்தனை செய்யாதே. உனக்கு ராகு கேது நீச்சமடைந்தாலும் இன்னும் 21 நாள்களில் வியாழன் நல்லவனாக வருகிறான். நவக்கிரக பூஜைசெய். நன்மை விளையும். இது மத்திபம்.

21

குருபகவான் ஐந்தினிலே அமர்ந்தானையா
குவலயத்தில் செழிப்புடனே வாழ்வாயப்பா
அருமைந்தர் தன்னாலே சுகமே யுண்டு
அருகிவி ம் கவலையெல்லாம் வழக்கு வெல்வாய்
வருவார்கள் திசைமாறிப் போன பேர்தாம்
வாணிபத்தில் லாபமுண்டு நோயும் நீங்கும்
பெருமைதரு மணம்கூடும் பொருளும் சேரும்
பேசுமொழி தவறென்றால் சுட்டுப் போடே.

அப்பனே! உனக்கு ஐந்தாமிடத்தில் வியாழன் இருப்ப தால் மனை செழிப்படையும். நிறைந்த புத்திர செல்வங் களைப் பெறுவாய். உன் மனக் கவலை விலகும். குடும்ப வழக்குகள் பைசலாகும். அதிகப் பொருள்கள் வருவா யோடு வெளியூர் சென்றவர்கள் வந்து சேர்வர். வாணிபம் வலுவடையும். பிணி நீங்கும் உறவினர் வீட்டில் ஒரு விவாகம் நடைபெறும். பொருள் சேரும். இவை 13 நாள்களுக்குப்பின் பயன் தரும். இந்த வாக்கியம் தப்புமானால் சாஸ்திரத் தையே சுட்டுப் போட்டு விடலாம்.

22

உன்கவலை உடனுடனே தீருமப்பா
உறவற்றுப் போனவரும் வந்து சேர்வார்
உன்வாழ்க்கை யாராலும் உரைக்கொணாது
பொன் பொருளும் விசித்திரமாய் சேருமப்பா
வள்ளலுடை அ நாளாலே வருடமூன்று
வலுக்குமப்பா எத்தொழிலைச் செய்தபோதும்
கள்ளமிலாப் பிள்ளைகளின் உதவியாலே
கருதியதை அடைகுவைநீ வெற்றி காண்பாய்

சூரியனைக் கண்ட பனிபோல உன் கவலைகள் இனி விலகும், குலப்பகையுற்றோரும் இனி உறவாவர். சில தினங்களில் விசித்திரமாகப் பொன், பொருள் சேர்க்கை ஏற்படும். எத்தொழிலும் ஏராளம் லாபம் தரும். 36 மாதங் களுக்கு நல்ல யோகம். ஆனால் வாரத்திற்கு ஒருநாள் தன்னாலியன்ற தர்மத்தை ஏழைகளுக்குச் செய்யவேண்டும் நாளுக்கு நாள் குடும்ப மேன்மை ஏற்படும்.

23

உந்தனைப்போல் பாக்யசாலி உத்தமனே
உலகத்தில் யார்சொல்லு வெற்றிகாண்பாய்
சுந்தரமாய் அரசசெல்வம் உண்டுனக்கு
சுகமுடனே தொழில்களால் லாபமுண்டு

செந்திருமால் அருளாலே பெண் குழந்தை
செனிக்குமப்பா கவலையது கொள்ளவேண்டாம்
உய்ந்திடவே சனிவார விரதம் [illegible]ண்டு
உறுதியுடன் நவக்கிரக பூஜை செய்யே.

நினைத்தது எல்லாமே பல[illegible] தரும். அளவற்ற லாபமும் தொழிலில் உண்டு. குடு[illegible]பத்தில் செழிப்பும். அரச செல்வமும் உண்டாகும். கண்ணன் அருளால் மனை யில் சின்னாளில் பெண் மகவு தோ[illegible]றும். அதன் பிறகு பல கவலையும் தீரும். சனி வார விர[illegible], நவக்கிரக பூஜை இவற்றை மேற் கொள்ளின் வம்பு வழக்கு நீங்கி இன்[illegible]முடன் வாழ்வாய். இது உத்தமம்.

## 24

சென்றதெலாம் மறந்துவிடு செழிப்புமுண்டு
செகத்தினிலே மனக்கலக்கம் உனக்கு வேண்டா
வென்றடக்கும் ராமர் மற்றும் தர்மர்
நிடதநளன் அரிச்சந்திரன் கதையைப் போல
கொண்டனைநீ இம்மாதம் சென்ற தானால்
குலைத்திட்ட பொருள் அனைத்தும் வந்துசேரும்
கொண்டதொரு கவலைநீக்கு [illegible]சல்வஞ் சேரும்
குளிர்மழலை வாணிபமும் சிறக்கும்பாரே

பல விதத்தில் தொழிலாலும் ப[illegible]வற்றாலும் அளவற்ற நஷ்டங்களை அடைந்தாய். அவற்[illegible]ற மறந்து விடவும். இதற்கு முன் ராமர், தர்மர், நளன, அரிச்சந்திரன் போன்றோரும் சனியினால் முதலில் அளவற்ற துன்பமுற்றாலும் பின்னர் இன்பமுற்றார்கள் அல்லவா? அதுபோல் தாயாதிகளின் பொருள் சேர்க்கையும் தொழி[illegible]லும் மேன்மை அடையும். நோய் நீங்கும். சிறுவர்[illegible]கு கல்வி ஞானம் அபிவிருத்தி அடையும். அயல் நா[illegible]டிலிருந்து வரும செய்தியால் அமோக லாபமுண்டு. கவலை[illegible]றிக் களிப[illegible]டைக. நினைப்பன பலிப்பதில் தற்சம[illegible] தாமதமே. இது மத்திபம்.

25

குறைப்பட்ட கிரகமெல்லாம் விலக லாச்சு
குடும்பமதில் வெற்றிதரு காலமாச்சு
குறைந்ததொரு பதின்மூன்று நாளே போனால்
கொள்கையனே ஐந்தாண்டு குற்றம் இல்லை
குறையற்றுச் சுற்றமொடு கூடி வாழ்வாய்
குடும்பசுகம் மகப்பேறும் தொழிலும் ஓங்கும்
நிறைகின்ற பொருள்சேரும் அரசனைப்போல்
நிச்சயமாய் வாழ்ந்திடுவாய் அதிர்ஷ்டந்தானே

உனக்குத் தீமை செய்த கிரகம் விலகி விட்டது. இன்னும் இரண்டு வாரத்தில் சந்திரன் ஏழிலும், குரு ஐந்திலும், சுக்கிரன் ஏழிலும் சனி பத்தாம் இடத்திலும் பார்வையாகிறான். அதனால் ஐந்து வருடம் நீ பிரபல யோகத்தை அனுபவிப்பாய். நல்ல காரியங்கள் கைகூடும். புத்திர சம்பத்து தொழில் மேன்மையுண்டு. நோய் விலகும். அதிசயப் பொன் பொருள் சேரும். எண்ணம் ஈடேறும். இது உத்தமம்.

26

இனியொன்றும் பயமில்லை இனிமை காண்பாய்
எண்ணமெலாம் பலித்திடுமே வெற்றி வாய்க்கும்
கனியென்று லாபங்கள் அடைவாய் அப்பா
காசினியில் செய்தொழிலும் ஓங்கும் பாரே
நனிகொன்றை மலரோனின் அருளினாலே
நல்லதோர் ஆண்மகவு பிறக்குமப்பா
இனியென்ன இருபதி ஏழு நாளில்
கனவினிலும் அதிசயங்கள் காண்பாய் தானே

நினைப்பன பலிக்கும், உறவினர் சேர்க்கை உண்டு பொன்னாபரண சேர்க்கை, தன லாபம். தொழில் மேன்மை ஏற்படும். மனையில் அழகிய ஆயுள் பலமுடைய ஆண் மகவு தோன்றும். அதனால் குடும்பம் மேன்மையுறும். கண்டம், நோய் இவை விலகும், பிறர் உதவியும் வட மேற்கிலிருந்து நற் செய்தியும் வரும். ஆனால் 27 நாள்களி

மனக்கவலை நீங்கி நிம்மதி பிறக்கும். இரவில் அதிசயக் கனவு காண்பதுவே இதற்கு அடையாளமாகும். இது உத்தமம்.

27

இடைஞ்சலாய் முடிந்ததெல்லாம் இனிதாய்த் தீரும்
எண்ணியவெல்லாமுனக்கு ஜெயமேயாகும்
புடைநின்று குலதெய்வம் பாதுகாக்கும்
புதல்வர்க்குக் கல்வியொடு ஞானமோங்கும்
தடையற்றுத் தொழில்நடக்கும் தனமே சேரும்
தாயாதிபொருள்சேரும் நோயும் நீங்கும்
புடைநின்ற பெரியோர்கள் உதவி கூடும்
புனல்கூர்ந்த செய்திகண்டுமகிழுவாயே

எந்த ஆபத்து உனக்கு வந்தாலும் அது துர்ப்பலமாகும். குடும்பத்தில் மடிந்தவர்கள் உன் குல தெய்வமாய்த் துணையிருப்பர். ஆன்றோர்களின் ஆசியுண்டு பங்காளிகள் பொருள் சேருதலும் தொழில் ஓங்குதலும் நோய் நீங்குதலும் உண்டாகும். சிறுவர்களுக்குக் கல்வி ஞானம் மேம்பாடு அடையும். கவலை வேண்டாம், களிப்படைவாய். உன் எண்ணம் பலிதமாகும். இது உத்தமம்.

28

பொல்லாது பொல்லாது கிரகமப்பா
பொக்கெனவே நினைப்பதெல்லாம் தடங்கலாகும்
நில்லாது பொருள்தீரும் தேசிபோல
கிட்டூர நஷ்டங்கள் நேருமப்பா
பொல்லாதான் என்றுன்னை வெறுப்பர் பெற்றோர்
உள்ளபொருள் தானழியும் நோயும் காணல்
பொல்லாத புறம்பேசும் குரும்பரால் சண்டை
போக்கிடுவாம் அறுமூன்று மாதம்தானே

உன் கிரகங்கள் தீயவை. எனவே சுற்றமும் மனைவியும் பிரிவர். மனதில் திகிலும், தொழில் நஷ்டமும், கவலையும்

ஏற்படும். உன் பெற்றோரும் உனைப் பழிப்பர். வறுமை வாட்டும், பொருளழிவு ஏற்படும். நோயின் உபாதை பெருகும். கலகமும் நிந்தனையும் சிலரால் உனக்கு ஏற்படும். ஆனால் 1 வருடம் 6 மாதம் போக நன்மை அடைவாய். இது மத்திபம்.

29

புவனமதில் பட்டதுயர் விலகிப் போச்சு
போற்றுகவே குறைவில்லை வற்றியாச்சு
கவனமது சிதையாது தழைத்து வாழ்வாய்
கனபொருளும் பெற்றிடுவாய் கவலை நீக்கு
உவணமதின் பகைராகு ஜன்மம் விட்டு
ஒதுங்கிடுவான் இருபத்து மூன்று நாளில்
தவமுனிவன் அகத்தியன் சொல் தப்பாதப்பா
தயக்கமின்றி நினைப்பதெல்லாம் நடக்கும்பாரே

நீ இதுவரை உற்ற துயரனைத்தும் இனி நீங்கிவிட்டது. இறையருள் இருப்பதால் ஒரு குறை இல்லை. இனியன நிகழும். எக்காரியமும் வெற்றி தரும். 1½ ஆண்டுகளாக உனைப் பார்த்திருந்த இராகு இன்னும் 25 நாள்களில் விலக அதன் பிறகு உன் செயல்களெல்லாம் உனக்கு நன்மையை நல்கும். நினைத்தவை நடக்கும். இது உத்தமம்.

30

இதுவரையில் ஆதிமுதல் துன்பம் தானே
ஏற்றனைநீ அநுபவித்து அவஸ்தையுற்றாய்
மெதுவாகப் பெரியோரின் பொருளைத் தோற்றாய்
மெத்தனத்துத் தொழில்முறையில் நஷ்டமுற்றாய்
பொதுவான பந்துகட்கும் வைரி யானாய்
பொருத்தமிலா நோயாலே துன்பப்பட்டாய்
கதியென்ற இருபதுநாள் சென்ற பின்னர்
கனசுகமும் உனக்குண்டு நினைத்துப்பாரே

நீ அளவில்லாத மனத் துயரினை ஆதி முதல் இது வரை அனுபவித்து வருகின்றாய். முன்னோர் செல்வத்தைத்

தொலைத்தாய். தொழிலும் நஷ்டமுற்றிருக்கலாம். சுற்றத்திற்கு விரோதியானாய். நோயாலும் உனக்குப் பொருள் அழிவே. நீ தைரியமாக இரு. இன்னும் 21 நாள்கள் சென்ற பிறகு உன் துன்பங்கள் அனைத்துமே நீங்கிக் குடும்பத்திலும் சுகம் ஏற்படும். நினைத்தன முடியும். இது உத்தமம்.

31

உந்தனுக்கு இப்பொழுது கெட்ட காலம்
ஊக்கமுடன் இருந்தாலே சுகமுண்டாகும்
சந்தின்றிக் குடும்பத்தில் சண்டையாகும்
சரி யன்று வாங்கியோர் கொடாரேயப்பா
நிந்தையின்றி உபகாரம் செய்திட்டாலும்
நேர்ந்திடுமே அபகாரம் நினைத்துப்பாரே
சொந்தொழில் முறையினிலும் நஷ்டமாகும்
சோராதே பத்துவாரம் பொறுப்பாயப்பா

தீய கோள்கள் அதிகார பலம் பெற்றதால் உனக்கு அளவற்ற கஷ்டங்களைக் காட்டும். ஒரு கருநிற மனிதனால் குடும்பத்தில் கலகமேற்படும். கொடுத்தது கேட்டால் பகை வந்து சேரும். உபகாரம் அபகாரமாகும். தொழில்முறையில் நிந்தையும், மனக்கவலையும், நஷ்டமும் ஏற்படும். ஆனாலும் அஞ்ச வேண்டாம். பத்து வாரம் சென்றால் நன்மை. இது மத்திபம்.

32

ஒன்பதிலே குருபகவான் இருக்கநன்றாம்
பொன்புவியில் சுபகாரியம் முடிக்க நன்றாம்
பொன்சிறுவர் பள்ளிகளில் சேர்க்க நன்றாம்
புகலரிய வாணிபமே செய்ய நன்றாம்
பொன்னுருக்க மனைகோல மிகவும் நன்றாம்
போனதொரு வெளிதேசப்பயணம் லாபம்
பொன்பொருளைக் கொடுவாங்கல் மிகவும்நன்றாம்
போற்றியொரு மருந்துண்ணப் பிணிநீங்குமாமே

நற்கோளான வியாழன் ஒன்பதாம் இடம்பெற்றிருப்பதால் பிள்ளைகளுக்குச் சுப காரியம் முடிக்கலாம். பாலகர்களின் கல்வி பரிமளிக்கும். சொந்தமாக வாணிபம் செய்யலாம். புதிய தொழிலால் லாபமுண்டு. நிலம் வாங்க, கிணறு தோண்ட, வீடுகட்ட நன்மை. கறவை வாங்க பால் வளம் பெருகும். க்ஷேத்ராடனம் செய்ய, வாணிபத்தின் பொருட்டு வெளியூர் செல்ல, லேவாதேவி செய்ய நலமே தரும். வியாதிஸ்தர்கள் மருந்து சாப்பிடச் சுகம் பெறுவர். இது உத்தமம்.

33

சந்திரனார் ஏழதனில் இருப்பதாலே
சார்ந்ததெலாம் உந்தனுக்குப் பொருத்தலாபம்
மைந்தர்களால் மெத்தசுகம் உனக்கேயுண்டு
மாறாதசொல் மொழிகள் தவறாதப்பா
சொந்தமனை தனிலுனக்குப் பொருளும் கிட்டும்
சோர்ந்தோடிப் போனோரும் வந்து சேர்வார்
வந்ததொரு நோய்விலகும் நாளீரெட்டில்
வகையாகப் பரம்பொருளின் அருளுமுண்டே

எண்ணம், எடுத்த தொழில் இவை பெருத்த லாபம் அளிக்கும். புத்திரர்களாலும், சுற்றத்தினராலும் சந்தோஷமும், உதவியும் உண்டாகும். சொல்லில் செயலில் நாணயம் மிகும். கேட்ட பொருள் கிடைக்கும். பிரிந்து சென்றவர் வந்தடைவர். துன்பம் தந்த நோய் விலகும். இன்னும் 16 நாளில் துன்பம் தீரும். இது உத்தமம்.

34

நாற்கோணப் பகைகேது சதிக்குள்ளாகும்
நண்ணிடாக் குற்றமெல்லாம் வந்தேதீரும்
பூர்வீகச் சொத்திருந்தால் அழியுமப்பா
வாதசுரம் பித்தமெனும் நோயுங்காணும்

யார்கதியே எனஏங்கி நிற்கநேரும்
காதார நற்செய்தி கேட்கலாகும்
கோள்பகையே ஆனாலும் மதியைக்கொண்டு
குவலயத்தில் வாரமெட்டு கழிந்திடாயே

கேது கிரகம் உனக்குப் பகையாதலால் தற்பொழுது கவலையே. பலரால் விபரீதமான வீணான குற்றங்கள் ஏற்படும். முன்னோர் பொருள் அழியும். நோய் பெருகும். சுற்றம், குடும்பம் பகையாகும். கவலையோங்கும். எப்பொழுதும் தீய செய்திகளே கேட்க நேரும். வினைவழி நடப்பதாயினும் புத்தியைக் கொண்டு நாளைக் கழித்து வர நன்மை வரும். 2 மாதங்களுக்குப் பின் உன் கவலைகள் அகலும். இது மத்திபம்.

35

பூவுலகில் உன்னுடைய கிரகமெல்லாம்
புரியுமாம் அனுகூலம் பயமே இல்லை
நீமனதில் எண்ணியன பலிக்குமப்பா
நேர்கின்ற தொழில்விர்த்தி என்றுமுண்டாம்
தேர்ச்சியுடை மனையாளால் குடிவிளங்கும்
திகைக்கவைத்த மனஸ்தாபம் விலகிப் போகும்
கோள்களுக்கு ஒன்பதுநாள் பூசைசெய்ய
குறையுமப்பா உனைப்பிடித்த பீடைதானே

கோள்கள் உனக்கு அனுகூலமாயின. உன் எண்ணங்களுக்கு இடையூறு நிகழா. உன் மனைவியில் மடிந்த ஒரு மாங்கல்ய ஸ்திரீயால் குடும்பம் செழித்தோங்கும். கவலை விலகி தொழில் விருத்தி, நல்ல லாபம். தொழிலில் நாணயம் நம்பிக்கை ஏற்படும். மனையில் மங்கள காரியம் நிகழும். கண்டமும் நோயும் அண்டாது. வெளியூர்ப் பயணம் நன்மை தரும். மனையில் செல்வாக்கு பொன்னாபரண சேர்க்கை ஏற்படும். ஆனால் 9 நாள் நவக்கிரக பூஜை செய்ய நன்மையுண்டாம். இது உத்தமம்.

36

உன்மனதில் நினைத்ததெலாம் ஜெயமதாகும்
உத்தமனே சித்தமது கலங்கிடாதே
உனைப்பிரிந்து போனவரும் வந்துசேர்வார்
துணைவியோடு மாடுமனை கொண்டு வாழ்வாய்
உனைப்பிடித்த நோய்விலகும் பாலராலே
உயர்பாக்கியம் நீயடைவாய் பின்னாள்தானே
புனக்கொன்றை மைந்தனே சாட்சியாச்சு
களிப்புறுவாய் இன்னுமேழு நாளுக்குள்ளே

நீ மனதில் நினைத்தவை வெற்றி தரும். சண்டையிட்டு குடும்பத்தினின்றும் சென்றோர் மீள்வர். இல்லற வாழ்வில் மாடுமனை முதலியவற்றைக் கொண்டு தொல்லையற வாழலாம். குழந்தை பாக்கியம் உண்டாகும். நீண்டகால நோய் குணமாகும். பிற்காலத்தில் பிள்ளைகளால் பெருமை உண்டு. ஆனால் இன்னும் ஒரு வாரத்தில் உன் துயரம் நீங்கும். இது உத்தமம்.

37

மகிழாதே மனக்கோட்டை கட்டிடாதே
மலைத்தவுடன் கிரகமெல்லாம் கொடியதாச்சே
மகிழ்வோடு செய்தொழிலில் நஷ்டம் காண்பாய்
மற்றோர்கள் உனைக்கெடுக்க உறவே யாவார்
நெகிழ்வருளும் நோயாலே வருத்தம் நேரும்
நேர்கவலை இடம்மாற்றம் நீயேகொள்ள
மனைவிமக்கள் சுற்றமுனை வெறுக்குமப்பா
மாதமூன்று போனபின்னே மகிழ்வாய் நீயே

உன் கிரகம் கொடியதாதலின் மனக்கலக்கம்—அச்சம், அலைச்சல் உண்டாகும். கேட்ட பொருள் கிடைக்காது. நீ நன்மை செய்யினும் பிறர் உன்னைக் கெடுக்க நினைப்பர். தொழிலில் நஷ்டம், குடும்பக் கஷ்டம் சுற்றத்தினரின் கடுமொழி முதலிய பலகுற்றம் ஏற்படும். குடும்பத்தில் சண்டை இடமாற்றம் இவை தொல்லை தரும். சிறிய நோயாயினும்

மிகவும் பாதிக்கும். ஆனால் 3 மாதங்கள் சென்றால் மனம் போல் வாழ்வமையும்—இது மத்திபம்.

38

இடம்விட்டுப் போவதற்கு எண்ணமுண்டு
இருந்தாலும் அதனாலே லாபமுண்டு
திடமனதுப் பெரியோர்கள் ஆசியுண்டு
தென்மேற்குத் திசைதனிலே செய்தியுண்டு
திடமனதை அடைந்தாலே நன்மையுண்டு
தைரியமாய் எத்தொழிலும் செய்யநன்று
முடவனெனும் சனிபகவான் விலகிவிட்டான்
மூன்றுநாள் போனபின்ளே சுகமுண்டாமே

இடம் மாற்ற எண்ணிய செயல் நன்மை—அதனால் லாபமே. பெரியார் உதவி உண்டு. தென் மேற்கில் நல்ல செய்தியுண்டு. அதனால் கனலாபம் உண்டு. எத் தொழிலும் ஏற்றுச் செய்யலாம். அதனால் விருத்தியும் மேன்மையும் உண்டு. குறைகொண்ட மனதுடையவனாக இருக்கிறாய். அதற்கு காரணமான சனியனும் விலகி ஏழு நாளாகிறது. இன்னும் 3 நாள் போக நன்மையே. இது உத்தமம்.

39

புத்திலே சூரியனும் உதயமாச்சு
பகையெல்லாம் பூண்டோடு அழியலாச்சு
மெத்ததுயர் தந்தபிணி விலகலாச்சு
மேன்மைதர வறுமை மனக்குறையும் போச்சு
உத்தமனே உன்னெண்ணம் பலிதமாச்சு
உயர்நிருபம் வெளிநின்றும் வருகலாச்சு
மெத்தசுகம் புகழ் பருமைக் காலமாச்சு
மேலாகப் பேசுமப்பா கௌளிதானே

பத்தில் உள்ள சூரியன் பலத்த லாபம் தரும். வஞ்சகர் ஒழிவர்; நோய் நீங்கும்; வறுமை வேரற்றுப் போகும். மனக் குறை தீரும். நல்லசெய்தி வெளியிலிருந்து வரும். வாணிபம்

ஏற்றம் நல்கும். உன் துன்பங்கள் தீர்ந்ததற்கு அடையாளமாக உன் தலைக்குயரமாக வீட்டில் பல்லிபாடு சொல்லும். இது உத்தமம்.

40

காரியவன் வக்கரித்தால் கனத்தசண்டை
காரியங்கள் சகலமதும் தடங்கலாகும்
தூரியநல் மனிதர்களும் பகையே யாவார்
தொல்பொருளும் சேதமுனக் காகும்பாரே
வீரமுடன் காரியங்கள் செய்யநேரும்
விளைந்திடுமே பெருந்துன்பம் வியாதிகாணும்
பாரமனம் கடனாலே கொந்தளிக்கும்
கழித்திடுவாய் நாற்பத்தி ஏழுநாளே

வக்ர சனியால் சகல காரியங்களும் தடங்கலாகும். சுற்றம் நிந்தனை செய்யும். பொருள் காணாமல் போகும். சேதம் உண்டு. முன் யோசனை இன்றிச் செயல்படுவதால் பழியும் துன்பமும் நேரும். சந்தேகம் மிகும். நோய் உபாதை ஏற்படும். ஆனால் 47 நாள்கள் நவகிரக பூஜை செய்ய நன்மையே விளையும். இது மத்திபம்.

41

பூமியிலே உன்கவலை நீங்கலாச்சு
புகைந்தவரும் தனியாகி ஏங்கலாச்சு
ஆமுனக்குப் போனபொருள் வந்துசேரும்
அரும்பெண்டிர் மனைகளிலே கர்ப்பமாச்சு
தோமெனவே வருபிணியும் விலகலாச்சு
துணிவடையேன் வெளியூரில் லாபமாச்சு
ஆமுன்றன் வாணிபம்கைத் தொழிலுமோங்கும்
அருமையுடன் ஏழையர்க்குத தர்மம் செய்யே

உனக்கு இனித் துயரம் ஏது? உன் பகைவர்களும் உன்னைக் கண்டு அஞ்சி ஓடுகிறார்கள். நீ தவறவிட்டிருந்த பொருளும் தொல்லையின்றி வந்து சேரும். மனையாள் கருத்தரிப்பாள். உன்னை வருத்திய நோயும் மணி, மந்திர

மருந்துகளால் குணமாகும். சில நாள்களில் வெளியூரில் உனக்குப் பெருத்த லாபம் கிடைக்கும். வாணிபமும், தொழிலும் மேலோங்கித் திகழும். ஆனால் வறுமையுற்றோர்க்குத் தர்மம் செய்க. நாளுக்கு நாள் நன்மையே. உத்தமம்.

42

எண்ணமொன்றை உள்ளத்தில் கொண்டதாலே
ஏங்குகிறாய் கவலையுற்று மாதமொன்றாய்
பெண்மணிகள் இனத்தோரின் கலகத்தாலே
பெரிதுமே இடைஞ்சலுண்டு குடும்பந்தன்னில்
பொன்பொருளும் தனதான்யம் நிலத்தைத் தோற்றாய்
பொல்லானாய் நின்றாயுன் குடும்பத்தார்க்கு
அன்றாடம் நவக்கிரக பூஜைசெய்தால்
அருவினைகள் நீங்கிசுகம் அடைவாய் நீயே

முப்பது நாள்களாக ஒன்றை நினைத்து நீ மிகவும் துன்பமுற்றிருக்கிறாய். அது உனக்குச் சாதகமாக முடியும். உன் குடும்பத்தில் செந்நிறமுடைய பெண்ணொருத்தி கலகமேற்படுத்தி வருகிறாள். முன்பும் சிலரின் கலகத்தால் பொன், பொருள் பூமி முதலியவற்றை இழந்திருக்கலாம். உறவுகள் பகையிருக்கலாம். நவக்கிரக பூஜை செய்ய உன் வினைகள் நீங்கி வாழ்வாய். இது மத்திபம்.

43

புதபகவான் ஒன்பதிலே உலவலாலே
புவனத்தில் நினைத்ததெல்லாம் பலிதமாகும்
இதமுடனே வாழ்ந்திடுவாய் கெண்டம் போச்சு
இருப்பைகடன் கெடுத்தாயே வருகலாச்சு
நிதமனையில் பொன்பொருளும் சேரலாச்சு
நிச்சயமாய்ப் பால்பாக்ய விருத்தியாச்சு
நிதம்கெடுப்பார் சகவாசம் நீக்கிநீயே
நீள்புவியில் நலமாக வாழ்ந்திடாயே

ஒன்பதாவது வீட்டில் நற்கோளான புதனமர்ந்ததால் உன் எண்ணம் திண்ணமாக முடியும். கண்ணிய வாழ்வும்,

சிறந்த நட்பும், கொடுத்த கடன் மீண்டுவருதலும் தொழி லில் லாபமும் கைகூடும். கண்டமும் நோயும் அண்டாது நிலபுலன், கால்நடைகள் வாங்கவும், பொன், பொருள் சேரும். தீயோர் உறவை அறவே அறுத்தெறி. அதன்பின் உனக்குக் கவலை ஏது? இது உத்தமம்.

44

அரவின்வாய்த் தேரைபோல் அலறிடாதே
ஆத்திரத்தில் ஒருவரையும் நிந்திக்காதே
காவுகொண்டு குடும்பத்தை வெறுத்திடாதே
கலகம்வெகு உன்மீது வருந்தப்பாது
திறமையின்றிச் செய்தொழிலை விட்டிடாதே
உரமுடைய நோயாலே கலங்கிடாதே
இறைசெவ்வாய் சனியாலே தோஷமுண்டு
இதற்காக நவக்கிரக பூஜைசெய்யே

உனக்கு செவ்வாய் தோஷம். அஷ்டமச் சனியின் பார்வை வேறு. அதனால் அளவிலாத் துன்பம் நேரும் பாம்பின் வாய்த் தேரையாய்ப் பதறி யாரையும் நிந்தியாதே கொடுமை தரும். குடும்பத்தை வெறுத்திடாதே. கலகங்கள் பல, மனையில் நிகழலாம். தொழிலில் நஷ்டமும், நோயும் தொல்லை தரும். தைரியத்துடன் 40 நாளைக்கு நவக்கிரக பூஜை செய்யின் நன்மை. இது மத்திபம்.

45

வீணெனவே நினைத்ததெல்லாம் அதிர்ஷ்டமாச்சு
விரும்புபுதன் அஷ்டமத்தில் அமரலாச்சு
ஊனமிலாப் பெரியோர் உதவியாச்சு
உன்துன்பம் உனைவிட்டு ஓடிப்போச்சு
ஈனமில்லா வலப்பக்கம்மச்சமொன்று
உருமீனைப் போலுனக்கு அமையலாச்சு
தேனாண்டாள் கமலாட்சி கருணையாலே
தெளிந்திடுவாய் இருபத்து நாளிலுண்மை

எட்டாமிடத்தில் புதனமர்ந்திருப்பதால் கவலை அகலும். தொழில் லாபம் உண்டு. தவிர மாடு, மனை, மனைவி மக்களுடன் இன்பமாக வாழ்வாய். பால் பாக்கியம் லாபம் உண்டு. இல்லத்தில் திருமணம் கூடும். சான்றோர் நேசமும் பெரிய உதவியும் ஏற்படும். பலவிதப் பொருளும் திருமகளின் கண்ணருளும் உண்டு. நோய்நொடிகளால் துன்பமில்லை. 20 நாள்களில் உன் இடையூறுகள் அகலும். இதற்கடையாளமாக உன் வலப் பக்கம் மச்சமிருக்கும். இது உத்தமம்.

## 46

நீயடையாத் துன்பமது உலகிலுண்டோ
நிறைந்திட்ட உறவாலே உதவியில்லை
நாயடைந்த தேங்காய்போல் குடும்பமாச்சு
நஷ்டமே யடைந்தபொருள் கணக்கேயில்லை
பேயடைந்த வீட்டினைப்போல் மனநோய்கொண்டாய்
பெண்டுபிள்ளை தன்னாலே மகிழ்ச்சியில்லை
வாயடைத்து மனமுடைந்து போனாயப்பா
வகையாக நவமாதம் கழித்திடாயே

அதிக துன்பங்களை இதுவரை அடைந்திருக்கிறாய். குடும்பத்திலும் உதவியில்லை. இழந்த பொருள்களாலும் இன்பமில்லை. சுற்றத்தாலும் மனைவி மக்களாலும் சுகமில்லை. மனநோயுற்ற உனக்கு ஏற்பட்ட நோய்க்கும் மருந்தில்லை. இத்துன்பங்கள் எல்லாம் 9 மாதங்களாக உன்னை விட்டுப்போகவும் மார்க்கம் இல்லை ஆனாலும் 8 நாளைக்கு நாள்தோறும் நவக்கிரக பூஜை செய்யின் நன்மை பெறுவாய். இது மத்திபம்.

## 47

கிரகத்தால் வருந்தோஷம் ஒழிஞ்சுபோச்சு
கீர்த்தியுள எண்ணமெலாம் பலிக்கலாச்சு
உரமிகுந்த உறவோர்கள் உதவியாலே
உன்னுடைய வாணிபம்நல் லாபமாச்சு

கரவுடைய நோயுனக்கு விலகலாச்சு
கடிதினிலே சிக்கலெலாம் ஒழியலாச்சு
தரணிதனில் தழைத்தோங்கி வாழ்வாயப்பா
தன்மையுள்ள நாளேழில் சுகமுண்டாகும்

தீயகோள்கள் விலகிவிட்டன. இனி உறவால் உத யுண்டு. பலவகைத் துன்பங்களும் பிணிகளும், சிக்கலா வழக்குகளும் தீங்கும். நம்பிக்கை நாணயம் மிகுந் தொழிலானது சிறக்கும். அதன் மூலம் நிறைந்த லா முண்டாகும். மனையில் மங்கல காரியம் மகிழ்வுட நிகழும். மனைவாங்குதலும் கால்நடைகள் வாங்குதலு கொண்டு குடும்பம் மேன்மையடையும். ஒரு வாரத்தி நினைத்தவை பலிக்கும். இது உத்தமம்

48

எண்ணமெலாம் உந்தனுக்குப் பலிதமாச்சு
ஈடில்லா உறவினரின் உதவியாலே
சொன்னமயமாய்த் தொழிலும் லாபமாச்சு
சுந்தரியால் உன்குடும்பம் சுகமதாச்சு
சின்னபுத்தி யுள்ளோரின் சிநேகம் போச்சு
சிக்கலுடை நோய்நீங்கி மணமதாச்சு
என்னவழி போனாலும் நன்மை யாச்சு
ஏழைகட்கு தர்மம்செய் ஈசன் சாட்சி

உறுதியாக உன் எண்ணங்கள் நிறைவுறும். சுற் தினர் உதவியும் செய்தொழில் லாபமும் உண்டா பானை பிடித்த பாக்கியசாலியால் சுபகரம் உண்டு. உன் வஞ்சிக்க நினைத்தோர் கூட்டம் அகன்றது. பிணி விலகியது. மனையிலே மாங்கல்யம் கூடும். எல்லா வ யிலும் நன்மையே. தானதர்மம் செய்க. இது உத்தமம்.

49

ஈராறு மாதமதாய்க் கஷ்டப் பட்டாய்
அதற்குமுன்னும் பலகாலம் அவதியுற்றாய்
ஒருமாதம் சென்றாலே உனக்கு நன்மை
உன் எண்ணம் வெற்றிபெறும் உண்மையப்பா

திருவாக்கு தப்பாது தொழிலு மோங்கும்
தேர்ந்திடுமே தனலாபம் நலிவுநீங்கும்
திருமணமும் கூடிவரும் மகப்பேறாகும்
குறுமுனிவர் அகத்தியர்தாம் கூறினாரே

நீ நீண்ட காலமாக கவலையும் பொருளிழப்பும் அடைந்து மெலிந்துள்ளாய். குறிப்பாக ஒருவருடமாக படாத பாடு படுகிறாய். வம்பு வழக்குகளால் பொருள் விரையம் அடைந்து வருகிறாய். அவையெல்லாம் இன்னும் முப்பது நாள்கள் போனால் நீங்கி நல்ல யோகத்தைச் செய்யும். இன்பமடைவாய். பிணி விலகி நலம் பெறுவாய். கேட்ட பொருள் உனக்குக் கிடைக்கும். தொழில் ஓங்குதலோடு வீட்டில் திருமணம் நிறைவேறும். புத்திர விருத்தியுண்டு. இது மத்திபம்.

## 50

நீயெடுத்த தொழிலுனக்குப் பலிதமாகும்
நிச்சயமாய்ப் பூமியிலே லாபம் உண்டு
நீகெடவே சதிகாரர் கூடினாலும்
நீறுபட அவர்கூட்டம் ஒழிந்து போகும்
சினவாது குலதெய்வ பூஜைசெய்தால்
சிறப்புடனே பொன்பொருளும் அடைவாய் உண்மை
கனமுடனே உலகமதில் வாழ்வாயென்று
கலக்கமிலாக் குறுமுனியும் உரைத்திட்டாரே

எத்தொழில் நினைத்து நீ செய்தாலும் குபேர தனத்தைப் பெறுவாய். உன்னைக் கெடுக்க நினைக்கும் பகை பூண்டோடு ஒழியும். நீ எதையும் பொருட்படுத்தாதே. உன் வீட்டில் மடிந்த குலதெய்வங்களை வெள்ளியன்று பூஜிக்கக் குடும்பம் செழிக்கும். மனக்கவலை விலகும். புத்ர யோகயமுண்டாம். பிணி அகன்று நினைத்தது நடக்கும். இது உத்தமம்.

51

சனிராகு கேதுனக்கு வைரியப்பா
சரிவுண்டு வாழ்வினிலே மனத்தில் துன்பம்
இனியாவும் வம்புதும்பு வந்தே தீரும்
இருப்பிடத்தை மாற்றிவைக்கும் இன்னும்கேளே
கனிவான மனைவிமக்கள் வெறுப்பார் பந்து
மனம்வைத்துச் செய்வதெல்லாம் நஷ்டமாகும்
இனியேது செய்வதென ஏங்கிடாதே
இடைஞ்சலெல்லாம் தீருமப்பா வார மாறில்

உனக்கு சனி, ராகு, கேது பகை. அதனால் மனை பலவிதத் துன்பங்கள் நிகழும். எதற்கெடுத்தாலும் வ வழக்குண்டாம். இடமாறிப் போகச் செய்யும் பிணி துன்பமும் சுற்றத்தினர் பகையும் சிநேகிதர்க கடுமொழியும் ஏற்படும். தொழில் கஷ்டத்தால் ம கஷ்டமுறுவாய். இவை இன்னும் 42 நாள்கள் செ அனுகூலமே நிகழும். இது மத்திபம்.

52

துன்பமெல்லாம் தொலைந்தின்பக் காலமாச்சு
அன்பருக் கருளுகுகன் அருளுமாச்சு
இன்பொருளை இழந்தாயே இனிமேல் நன்மை
ஏற்பதனால் குடும்பத்தில் சுகமதாச்சு
பொன்பொருளை அடைவாயே தொழிலின்மூலம்
உன் மனம்போல் உறவில்மணம் கூடலாச்சு
எண்வகை இலக்குமியும் மனையில்வாழ
ஈடரிய செல்வமெலாம் உன்னதாச்சே

நீ வெற்றியடையும் காலம். இனி உனக் துயரில்லை. குமரப் பெருமானின் கருணையால் நீ நஷ் பட்ட பொருள்களில் சில வந்து சேரும். குடும்பம் தன கும். அளவிலா லாபங்கள் தொழில் முறையிலு அதிர்ஷ்ட வசமான அமைப்புகள் ஏற்படுவதோ உறவிலே மணமும் நிகழும். அரச போகமுண்டா

இன்று முதல் அஷ்டலக்ஷ்மியும் உ னையில் உறைவர். பொன்னும் ஆபரணங்களும் நும். நினைத்தவை பலிக்கும்—இது உத்தமம்.

53

பழவினையின் பயனென்றே நோகாதேநீ
பதித்ததொரு கிரகபார்வைக் கோளாறாமே
வளர்நிதியம் இன்றிமுன் கோபம் கொண்டாய்
வகையுணராய் பலிசெயலில் ஈடுபட்டாய்
இழந்தனைநீ பதிபொருளைத் தொ லைத்தாமே
இரந்துண்ணும் பரதேசி மனமே பெற்றாய்
தளர்வின்றி திங்கள் மூன்று செ றதானால்
தகுதியுடன் பலவிதத்தில் வெற்றியுண்டாம்

கிரகக் கோளாறு உன்னை வாட்டுகிறது. நீ வருந்தாதே! இஷ்ட தெய்வங்க ம் பெற்றோரையும் தூஷணை செய்யாதே. முன்பும் முன் கோபத்தினால் இடம் விட்டுப் பலவிதம் பிரிந் க்கலாம். பொருளும் இழந்திருக்கலாம். இன்று தொழிலில் நஷ்ட ட்டு ஏதுமற்றவனாக இருக்கிறாய். இருப்பினும் அஞ்சாதே. 7-ஆண்டுகளாகத் துயருற்ற நீ னும் 3 மா ங்கள் போக எதனைச் செய்தாலும் வெ றி அடைவது உறுதி. இது மத்திபம்.

54

சட்டுதியில்நீ சந்தேகம் கொள்ள வேண்டா
சண்முகனின் பாதமலர் சாட்சியாக
கெடுதியின்றி உன்னெண்ணம் முடியுமப்பா
கேடில்லாப் பொருள்சேரும் உண்மையப்பா
விடமுடியாப் பெரியோர்கள் உதவு வா கள்
வீரமுடன் வி பாரம் செய்யலாமே
படமுடியா நோய்தீரும் பரிவே சே க்கும்
பட்சமுடன் துதித்திடுவாய் குலதெய்வத்தை

அப்பனே ஐயமுப த! மு ட்சியாக இ ி உன் துயர்கள் நீங்கும். மனக்கவல ியும். தி ங்கள்

வெற்றியடையும். குடும்பம் தழைத்தலோடு தனலாபம் ஏற்படும். கடன் தொல்லையும் கொடு நோயும் அகலும் ஆன்றோர் உதவி ஏற்படும். தொழிலில் தீமையின்றி இலாபம் சேரும். ஆனால் திங்கள்கிழமை விரதமிருந்து உன் குலதெய்வத்தை வழிபட்டு வர நன்மையடைவாய் இது உத்தமம்.

55

இரண்டினிலே சந்திரனும் இருத்தல் தீது
இனியமண மாலைசூடல் இன்னும் தீது
கறவையினம் மனைவாங்கல் மேலும் தீது
கண்டவூர் சென்றிடுதல்மிகவும் தீது
திறமைபெறக் கொடுத்தகடன் கேட்டல் தீது
திண்பொருளால் வாணிபமே செய்தல் தீது
உறவெனவே பழகுநண்ப ராலே தீது
உத்தமனே வாரமைந்து கழிப்பா யப்பா

சந்திரன் இரண்டில் இருப்பது கொடிது. மனையில் மணம் நடப்பினும், மாடு மனை வாங்கினாலும் விருத்தி ஏற்படாது. வேற்றூர் சென்றாலும் விதியதுவே. கொடுத்த கடன் கேட்டால் அடுத்து வரும் பகை. வாணிபத்தில் நஷ்டம். நண்பர்களால் தீங்கு. இன்னும் ஐந்து வாரம் எச்சரிக்கையுடன் இருக்கவும். பின்னர் நன்மையே: இது மத்திபம்.

56

எண்ணுகிற எண்ணமெல்லாம் பலிக்குமப்பா
எத்தொழிலைச் செய்தாலும் லாபமுண்டு
நண்ணிவரு துன்பமெல்லாம் தீருமப்பா
நற்பிறந்தோர் பந்துக்களால் நன்மையப்பா
பண்ணுபகை யாள உற வாவாரப்பா
படிந்ததொரு நோய்நீங்கிப் பலிதமப்பா
நன்மைதரு பல்பொருளும் சேர்ப்பாயப்பா
நாற்பத்தி ரெண்டுநாளில் நலமுண்டாமே

இனி இடரின்றி உன் எண்ணம் ஈடேறும். எல்லாத் தொழிலும் உனக்கு ஏற்றமே தரும், இலாபமும் உண்டு. பகைத்திருந்த சுற்றமும் நட்பும் உறவு கொள்வர். வந்த பிணி நீங்கும். மனைவியால் குடும்ப விருத்தியுண்டாகும். சுற்றத்தினர் ஒருவரால் திரண்ட தனம் கிடைக்கும், குடும்பத்தில் ஆடை ஆபரணச் சேர்க்கையால் செலவும், சிறப்பும் உண்டாகும். வேற்றூரிலும் லாபமே. 42 நாள்களில் உன் மனக்கவலை நீங்கும்.

## 57

சூரியனார் ஆறதனில் உள்ளதாலே
சுந்தரனே உன்எண்ணம் பலிதமப்பா
போரினிலே நின்றாலும் வெற்றியுண்டே
போனபொருள் உடன்வந்து சேருமப்பா
பாரினிலே வாணிபத்தால் லாபம் காணும்
கோவுடனே மனைகோல உண்டுபாக்யம்
ஈராறு ஒருநாளின் பின்னை யுன்றன்
இருங்கவலை நீங்கிடுமே இன்பந்தானே

ஆதவன் உனக்கு ஆறாம் வீட்டிலிருப்பதால் நீ அடுத்து எக்காரியமாயினும் உனக்கு அனுகூலந்தான். போர்க்களம் போனாலும் புகழும், வெற்றியும் உனக்குண்டு. இழந்த பொருள் இடையூறின்றி, மீளும். வாணிபத்தில் லாபம், கால்நடை ஜீவன்களால் நல்ல பாக்கியமுண்டு. பிரயாணம் மேற்கொள்ளவும், வீடு கட்டவும் நன்மையே நிகழும். இன்னும் 13 நாள்களுக்குள் உன் துன்பங்கள் அனைத்தும் நீங்கும், இது உத்தமம்.

## 58

அகத்திபனார் வாக்கியந்தான் பிசகாதப்பா
அப்பனே உன்எண்ணம் பலித்திடாது
செகத்தினிலே வேறொருவர் சொற்கேளாதே
சேர்ந்தஉன் பிறப்போடு பந்து பகை

அ;—3

முகமலர்ந்த தருமத்தால் வறுமையப்பா
முன்னின்ற தரித்திரத்தால் விரையமப்பா
புகலென்று ஊர்மாறி ஓட்டுமப்பா
புண்ணியனே மாதமொன்று கழித்திடாயே

தீக்கோள்களினால் உனக்கு குடும்பம், தொழில், நட்பு கொடுக்கல் வாங்கல் இவற்றில் கவலை ஏற்படுவதோடு காரியத் தடங்கலும் ஏற்படும். யார் பேச்சையும் நம்பாதே இடம் மாற்றி வைக்கும். நீ நன்மை செய்தாலும் தீமையே ஏற்படும். கைப்பொருள் அழியும். பகைவர்க்கு அஞ்சும் நிலை ஏற்படும். ஆனால் நவக்கிரகப் பூஜை செய்து வர நன்மையுண்டு. 30 நாள்களுக்குப் பின் உன் கவலைகள் நீங்கும். இது மத்திபம்.

59

அச்சமின்றிக் கேளுமப்பா ஆருடத்தை
அனுதினமும் நவகிரகப் பூசை செய்க
மிச்சமின்றித் துயர்தீரும் தனமும் சேரும்
முட்டாது உன்வார்த்தை மேன்மையாகும்
சிற்சிலநாள் இதுவரையில் கஷ்டமுற்றாய்
சினத்தாலே பலபொருளும் நஷ்டமுற்றாய்
துர்ச்சனரால் மிகவும்நீ வருத்தமுற்றாய்
துயரகலும் இவ்வாரம் கழியத்தானே

சிறிது காலமாக பெருந்துன்பங்களை அடைந்து வருகிறாய். எனினும் அஞ்சாதே! உன் கோபத்தால் பொருள் இழந்தாய். ஆயினும் நவக்கிரகத்தை தினமும் பூஜிக்க மனத்துயர் நீங்கி தனலாபம் அடைவாய். உன் காரியம் மேன்மையுடையதாகவே அமையும். ஏழு நாள்கள் சென்றால் உனக்கு இன்பமும், மேலான லாபமும் உண்டு. இது உத்தமம்.

60

கவலையே உந்தனுக்கு அதிகமாகும்
கணத்தில் நினைப்பதெல்லாம் அவலமாகும்
நவதொழிலே செய்தாலும் நட்டமாகும்
நற்புவியில் மனைவிமக்கள் பகையேயாவர்
அவமொழியால் குடும்பத்தில் கலகமாகும்
அவ்வுள்ள பொருளதுவும் களவிற்போகும்
புவனமதில் தரித்திரமே; சிநேகம் நீங்கும்
பொறுத்திடப்பா நாளுக்குநாள்தான் பாரே

கிரகங்கள் நீச்சமுற்றதால் மனத்துயர் அதிகரிக்கும். செய்யும் தொழிலில் நஷ்டம் காணும். பிள்ளைகளும் மனைவியும் பகையாவர். ஒரு பெண்ணால் குடும்பத்தில் கலகமேற்படும். களவு போதலும், வைத்திருந்த பொருள் காணாமல் போதலும், மேலும் மேலும் வறுமையுறுதலும் நீடிக்கும். உன் பேச்சு பிறருக்கு விஷம் போன்றதாகும். நாளுக்கு நாள் உன் துயர் நீங்கும். அஞ்ச வேண்டாம். இது மத்திபம்.

61

ஒன்பதிலே குருபகவான் பார்வையாலே
உனக்கெனவோர் யோகதிசை வந்ததையா
கன்னியரால் லாபமுண்டு துன்பம்போச்சு
கண்ணியமாய்த் துரைத்தனத்தில் தொழிலுமாச்சு
நண்ணுபிணி நீங்கிடவே நலிவும்போச்சு
நல்லபல ஊர்ச்செய்தி நன்மையாச்சு
எண்ணுகிற மறைமொழியும் இதுவேயப்பா
எங்கள்முனி அகத்தியனார் அறிவித்தாரே

பொன்னவனாம் குரு ஒன்பதில் பார்வை பெற்றிருப்பதால் உனக்கு யோகமே. மனைவி மூலம் நல்ல லாபம் ஏற்படும். அரசால் உத்தியோகபலமேற்படும். பல இடங்களிலிருந்து தன லாபம் ஏற்படும். இன்பம் காணும். நோய் குணமாகும். இது மறைமொழியாகும். உனக்குக் கவலையில்லை. இன்பமே ஏற்படும். இது உத்தமம்.

62

ஆதவனும் பன்னிரண்டில் வந்ததாலே
அநேகமாம் உதவிஉனக் குண்டேயப்பா
நீதிவழி பணியணிகள் சேருமப்பா
நிறைலாபம்: பாவையர்க்குக் கர்ப்பபலன்
ஆதிமுதல் எத்தொழிலைச் செய்தபோதும்
அல்லலின்றி விருத்தியதே ஆகுமப்பா
மீதியென்ன உன்துயரம் நீங்குமப்பா
மிகுதியுள்ள ஒன்பதுநாள் கழித்திடாயே

சூரியனும் பன்னிரண்டாம் இடமுற்றான். அதனால் பலரது உதவி கிட்டும். மிக மேலான ஆடை, ஆபரணங்கள் வந்து சேரும். எல்லாவிதத்திலும் லாபமே ஏற்படும். குடும்பத்தில் ஆண் மகவு தோன்றும். தொழிலாக எதனை செய்யினும் தொந்தரவு இல்லை. இன்னும் ஒன்பது நாள் போனால் உன் கஷ்டங்கள் படிப்படியாய் நீங்கும். எண்ணம் பலிக்கும். இது உத்தமம்.

63

சனிராகு கிரகபகை பொல்லாதப்பா
தனிவழியில் காரியங்கள் தடங்கலாகும்
கணத்தினுக்குள் அலைச்சலினைத் தந்தேதீரும்
கனத்தபகை சிநேகிதரால் நேரும் பாரு
மனத்தினிலே நல்லதெண்ணின் பொல்லாப்பாகும்
நஷ்டமப்பா தொழில் முறையில் வித்தையுண்டு
குணத்தினால் நாற்பத்தி மூன்று நாளில்
குறையகலும் அகத்தியனார் கூறுமாறே.

காரியத்தடங்கலும், வீணான அலைச்சலும், ஏராளமான பொருள் விரயங்களும் உண்டாகும். நண்பர் பகைப்பர், தொழில் வழிச் சிந்தனையும், கவலைகளும் மிகும். நன்மை செய்யினும் வீண்பழியே ஏற்படும். பொருள் விரயம்

கொடுநோய், பில்லி சூனியத் தொடர்பு, உன்னுடைய வாக்குப் பிறருக்கு விஷம் போலாதல் போன்றன நிகழும். சனி ராகு பகையானதால் 43 நாள்கள் போக நன்மையே. இது மத்திபம்.

64

குருமுனிவன் வாக்கியத்தை உணர்ந்தபேர்தான்
குவலயத்தில் நம்பிமோசம் போனதில்லை
அருமையுள குடும்பத்தில் கஷ்டம்தீரும்
ஆதரவே சுபக்கிரகம் லாபமுண்டாம்
அருமகவும் சுகவாழ்வும் பகையும் நீங்கும்
அடுமணலை எடுத்தாலும் சுடுபொன்னாகும்
துருவனென எதிரின்றிச் செழித்து வாழ்வாய்
துளசி குகன் அருளாலே செப்பினேனே

அகத்தியர் ஆரூடத்தை நம்பி யாரும் கேடுறவில்லை. குடும்பத் தொல்லைகள் நீங்கும், தீமையும், கொடுமையும் இருந்த இடம் தெரியாமல் போகும். நாள்தோறும் நவக்கிரக பூஜை செய்வார் எவராயினும் அவர்களுக்குச் சுகவாழ்வும், தொழிலில் உயர்வும், மேலான அதிர்ஷ்டமும், நிகரில்லாத வாழ்வும் அமைவது உறுதி. இது மிக உத்தமமானது.

— அகத்தியர் ஆரூடம் முற்றிற்று. —

# அகத்திய முனிவர் அருளிச் செய்த பாய்ச்சிகை சாத்திரம்

## 1-1-1

மூன்றுமே ஒன்றுவந்தால் முடிந்திடும் நினைத்த தெல்லாம்
தோன்றிய புவியில் நீயும் தூயதோர் அரசன்தானே
கான்றிரு பம்பு சூன்யம் கணத்தினில் நீங்க மலாபம்
தோன்றிய சரவணத்தார் துணையினில் தாழ்ச்சி இல்லை

(இ-ள்) ஒவ்வொன்றாக மூன்று முறையும் ஒன்றே வீழ்ந்தால் நீ எண்ணிய காரியம் பலிதமாகும். அரசனைப் போல் வாழ்வாய்; பில்லி சூனியம் உன்னை அண்டாது. அர்த்த லாபமுண்டு. இனி உனக்குத் துன்பமே இல்லை.

## 1-1-2

ஒன்றொடு ஒன்றும் இரண்டும் உடனுடன் விழுமேயானால்
பொன்றிடும் சீரும் நல்ல சிக்குகள் பலவுண்டாமே
கன்றியே பேர்கெடுக்கும் கட்டிய மனைவி யாவாள்
என்றுமே நினைத்த எண்ணம் கூடாது நாள்தானாமே

(இ-ள்) முதலில் ஒன்றும் பின்னொன்றும் இறுதியில் இரண்டும் வீழ்ந்தால் உன் மனை சீரழியும். சிக்கலும் உண்டாகும். உன் மனைவியே உன் பெயரைக் கெடுக்கத் துணை போவாள். உன் எண்ணம் பலிக்காது. அது பலிக்க வெகுகாலமாகும்.

## 1-1-3

தானென ஒன்று ஒன்றும் தனியொருமூன்றும் வீழ்ந்தால்
ஆணெனப் பிறக்கும்பிள்ளை அதனாலே யோகம் உண்டு
வீணெனக் கவலைவேண்டாம் விலகிடும் கெண்டம் நோயும்
தோணியாம் முருகனாலே தோணாது கவலையப்பா

(இ-ள்) முன்னொன்றும் பின்னொன்றும் இறுதியில் மூன்றும் வீழ்ந்தால், உனக்கு ஆண் மகவு அவதரிக்கும். அதிர்ஷ்டம் மிக உண்டாகும். எத்தகைய ஆபத்தும் இடையூறுகளும் நீங்கிப் போகும். பிணிகள் விலகும். செவ்வேள் கருணையால் சங்கடங்கள் நீங்கும்.

1-1-6

ஒன்றுடன் ஒன்றும் ஆறும் உண்டப்பா கெடுதியுண்டு
நின்றிட விழுகுமானால் நிலைக்காது எண்ணமெல்லாம்
மன்றுடை மன்னனாலே மானமே போகும்பாரு
சென்றிடும் உனதுசெல்வம் சொல்லுமேவிஷமாய்ப் போகும்

(இ-ள்) வரிசையாக இரண்டு ஒன்றும் இறுதியில் ஆறும் விழுமானால் எண்ணம் பலன் தராது. துரைத்தனத்தால் பகை ஏற்படும்; பொன் பொருள் விரயம் உண்டு. உன் பேச்சே நஞ்சாகும்.

1-2-1

ஒன்று ரெண்டோடொன்று வீழ்ந்தால் உனைப் பார்ப்பார் விஷத்தைப்போல
குன்றிய வார்த்தைபேசி கனபொருள் பறிப்பார்தாமே
நன்றுநீ உரைத்திட்டாலும் நடுநிலை உனக்கிராது
கொன்றுமிழ் கடனின் தொல்லை கூட்டுமே கவலையாவும்

(இ-ள்) முதலில் ஒன்றும் பின்னிரண்டும் முடிவில் ஒன்றும் வீழ்ந்தால், சுற்றமும் நட்பும் பகைத்து அரவினைப் போல் பார்ப்பர். நீ கூறும் மெய்யை எவரும் உணரார்; கடன் தொல்லையே காட்டும்.

1-2-2

கலக்கமேன் ஒன்றும் ரெண்டும் இரண்டுமே விழுகுமானால்
துலக்குறும் நாட்செல் செல்வம் ஜீவனும் வந்து சேரும்
குலத்தவர் பிறரும் உன்றன் குணத்தினைப் போற்றுவார்கள்
துலக்கமாம் நோயும் நீங்கும் துணைவரால் சகாயம் உண்டே

(இ-ள்) முன்னொரு ஒன்று பின் இரு இரண்டும் விழு மானால் பலவகையில் லாபமுண்டாகும். 8 நாளைக்குள் காணாமல் போன பொருளோ ஜீவனோ வந்தடையும். உன்னை உலகினர் மதிப்பர்; பிணி விலகும். நண்பர்கள் உதவியுண்டு.

1-2-3

ஒன்றுடன் இரண்டும் மூன்றும் உடனுடன் விழுகுமானால்
வென்றிடா விகாரத் தோற்றம் வீண்பெயர் எடுப்பாயப்பா
பொன்றிய மரணச்சேதி புதுமையாய் அகாலத்தில் கேட்பாய்
கன்றியே சுகம் கெட்டாலும் தைரியம் இழந்திடாதே

(இ-ள்) முதலில் ஒன்றும் பின்னிரண்டும் இறுதியில் மூன்றும் விழுமானால் நீ விகாரமான தோற்றமளிப்பாய். வீண்பழி ஏற்படும். உபகாரம் செய்தாலும் அபகாரம் நேரும். சுற்றத்தினரின் மரணச் செய்தியை திடீரெனக் கேட்பாய். உன் இன்பம் எல்லாம் நீங்கிடுமானாலும் மன தைரியத்தை இழக்காதே.

1-2-6

தைரியம் கொள்வாயப்பா தனியொன்றும் இரண்டும் ஆறும்
வைரியாய் இருந்தபேரும் வாழ்த்துவர் உனைவணங்கி
சௌரியம் தொழிலில் மேன்மை சஞ்சலம் பிணியும் நீங்கி
பரிவுடன் பிறக்கும்பிள்ளை பாரினில் அவனால் யோகம்

(இ-ள்) முன்னொன்றும் இறுதியில் ஆறும் இடையில் இரண்டும் விழுந்தால், பகையும் உறவாகும். தொழிலில் விருத்தியும் லாபமும்உண்டு. பிணியும் கெண்டாதிதோஷமும் இல்லை. சின்னாளில் ஆண்மகவு அவதரிக்கும். அதனால் உனக்கு லாபமே உண்டாகும்.

1-3-1

ஒன்றுடன் மூன்றும் உடனொன்றும் விழுகுமானால்
உன்னத யோகமுண்டு உன்பொருள் அநேகம் சேரும்
இன்னலே யின்றி உந்தன் எண்ணமும் விரைவில் கூடும்
துன்னென விலகும்நோயே தொழிலது விருத்தியாமே

முன்னொன்றும் முடிவில் ஒன்றும் இடையில் மூன்றும் விழுமானால் நல்ல யோகமே. நிறைந்த பொருள் சேரும்; நினைத்தன நடக்கும். நீங்கா நோய் நீங்கும். மருந்தீடும் உண்டு. வாணிப விருத்தியும் நன்மையான சேதியும் வாய்க்கும்.

1-3 2

காணப்பா விழுந்த எண்ணை ஒன்று மூன்றிரண்டேயாகும்
கனகாமம் அளித்த பெண்ணும் கைவிடுவாளே யுன்னை
மாண்பொருள் அழிந்தேபோகும் மல்கிடும் துயரம்தானே
ஏனப்பா ஏதுகீர்த்தி நவக்கிரகப் பூஜை செய்யே

(இ-ள்) முன்னொன்றும் இடையில் மூன்றும் இறுதியில் இரண்டும் விழுமானால், உன் பிரியத்துக்குகந்த மனைவி உன் பொருளை அபகரித்து உன்னைக் கைவிட்டு விடுவாள்; உன் சுகம் கெடும். நிந்தனையுண்டாகும்; மனக்கவலை யுறுவாய். இன்று முதல் 9 நாள்கள் நவ கோள்களுக்கும் பூஜை செய்க.

1-3-3

நல்லதே கிரகமாச்சு காணுமொன்றிருமூன்றாச்சு
பல்பொருள் மறைந்து சேரும் நோயது மருந்தில் நீங்கும்
நல்மணம் கூடும் லாபம் தொழிலிலே காணும் இன்னே
நல்லறம் புரிகுவையேல் நன்மையே முனிவர் சொன்னார்

(இ-ள்) பின்னிரு மூன்றும் முன்னொன்றுமாக விழின், களவு போன பொருள் கைகூடும், கொடிய பிணி விலகும்; திருமணம் கைகூடும்; தொழில் அபிவிருத்தி உண்டாகும். குருமுனியின் வாக்கு தவறாது. தர்மம் செய்க தழைப்பாய் வாழ்வில்.

1-3-6

ஒன்றுடன் மூன்றும் ஆறும் உடனுடன் விழுந்ததாலே
உன் துணை பிள்ளை யாவும் உன்னுடைச் சொல்லைக் கேளார்
உன்பொருள் நஷ்டம் காணும் துணைவரால் சண்டை நேரும்
நண்ணிலா நோயும் வாட்டும் தொலைதூரச் செய்திதானே

(இ-ள்) முன்னொன்றும் இறுதியில் ஆறும் இடையில் மூன்றும் உதயமானால் உன் வார்த்தைகளைப் பெண்டு பிள்ளைகளும் மீறி நடப்பர். நண்பர்களால் சண்டை சச்சரவு, பொருளழிவு, மிகவும் மனக்கவலை, மோசமான நோயுபாதை, தீய செய்திகள் தூரத்திலிருந்து வருதலும் ஏற்படும். காரியம் கை கூடாது.

## 1-6-1

ஒன்றொடு ஆறும் ஒன்றும் உடனுடன் விழுமேயாகில்
வென்றடுபகைதான் மெத்த மேலவர் ஆஸ்தி பாழாம்
தன்றனிக் கண்ணி தன்னில் மான்படும் கவலை போல
தன்பதிக் குள்ளே நீயும் வருந்தவே நேருமப்பா

(இ-ள்) முன்னொன்றும் இறுதியில் ஒன்றும் இடையில் ஆறும் வருமானால், மிகுந்த பகை உண்டாகும். முன்னோர் தேடிய செல்வம் அழியும்; வலைப்பட்ட மான் போல நீ கலங்கி நிற்க நேரிடும். இப்புவனத்தில் நீதான் மிகவும் துன்பப்பட்டவன் போல் காட்சியளிப்பாய். எனினும் தயங்காதே, தைரியத்தைக் கைவிடாதிருந்தால் சீக்கிரத்தில் நன்மையடைவாய்.

## 1-6-2

ஒன்றொடு ஆறும்இன்னும் உறுதியாய் இரண்டும் வீழ்ந்தால்
தன்மனத் தெண்ணம் எல்லாம் தப்பாது பலிக்குமப்பா
நன்றுடை வாழ்வுண்டாகும் நல்லாபம் உள்ளூரில்தான்
பொன்றிடும் பகையும் நோயும் கங்கணப் பிராப்தமாமே

(இ-ள்) முன்னொன்றும் முடிவில் இரண்டும் இடையில் ஆறும் விழுமானால் எண்ணமெல்லாம் ஈடேறும். செல்வாக்கான வாழ்க்கையுண்டாகும். தனதூரிலேயே ஏராள லாபங்கள் கிட்டும்; பிணியும் பகையும் நீங்கும். நல்ல காரியங்கள் மனையில் நிகழும்.

1-6-3

அப்பனே ஒன்றாறு மூன்று உதித்திடல் புன்மைதானே
செப்பரும் துயரம் உண்டாம் சலிப்பினில் இடத்தை மாற்றும்
சொப்பனம் பொருளதாகும் சோகமாய் நோயுமுண்டாம்
எப்பவும் தொழிலால் நஷ்டம் பொல்லாப்பும் அடைகுவாயே

(இ-ள்) முடிவில் மூன்றும் முதலில் ஒன்றும் இடையில் ஆறும் விழுமானால் மனையில் சண்டை சச்சரவுகள் நேரும். எப்போதும் துன்பமே ஏற்படும். சினத்தினால் இடம் பெயர்வாய். பொருளழிவும் உண்டு. தீமை பயக்கும், நோயுமுண்டாகும், நண்பர்களால் பொல்லாப்புமுண்டு.

1 6-6

ஒன்றாறும் ஆறும் வீழ்ந்தால் உன்னத லாபமப்பா
நன்றாகும் குடிவிளங்க நன்மகப் பேறு வாய்க்கும்
பொன்றாத புகழுண்டாகும் புடைசூழும் சுற்றம் தானும்
கன்றிடத் துயர்வந் தெய்தா கருதுவை இதனைநீயே

(இ-ள்) முன்னொரு ஒன்றும் பின்னிரு ஆறும் விழுமானால் புத்திரப் பேறுண்டு. சுற்றத்தாரோடு அன்புடன் வாழ்குவை. இடையில் கஷ்டம் ஏற்படினும் அது உன்னை ஒன்றும் செய்யாது. உன் ஆயுள் முழுவதும் சுகத்தையே அனுபவிப்பாய்.

2-1-1

முன்னொரு இரண்டு வீழ்ந்து முறைமையில் இரண்டு ஒன்றாய்
நின்றது என்றிட்டாலே நிறைதனம் அழியும் இன்னும்
ஒன்றிய பயணம் தீது உண்மையில் கலகம் காணும்
ஒன்றிய மனைவிமக்கள் உன்பகை; எண்ணமும் ஈடேறாதே

(இ-ள்) முன்னிரண்டும் பின்னிரு ஒன்றும் விழின் அடிக்கடி பொருளழிவு ஏற்படும். வெளியூர் பயணம் க்ஷேத்ராடனம் போதல் தகாது. குடும்பத்தில் கலகமும் பெண்டு

பிள்ளைகள் பகையும் ஏற்படுதல் தப்பாது. உன் எண்ணம் ஒன்றும் பலியாது.

2-1-2

இரண்டொடு ஒன்று ரெண்டும் இணைந்துடன் வீழ்ந்த தானால்
திரண்ட தீவினைகள் நீங்கும் தீப்பிணி அகன்று போகும்
பிறந்ததோர் உடன்பிறப்பால் பெருகிடும் லாபமப்பா
திறமுடைத் தொழிலில் லாபம் தேடுபொன் தானே நாடும்

(இ-ள்) முதலிலும் முடிவிலும் இரண்டும், இடையில் ஒன்றும் விழின், தீய நோய்களும் தீவினைகளும் நீங்கும். உடன் பிறந்தவர்களால் லாபம் வேண்டிய அளவிற்கு ஏற்படும். நீ எதிர்பாராத வண்ணம் நீ விரும்பிய பொருள் உனை வந்தடையும். செய்தொழில் விருத்தியுண்டாம். தனவந்தனாகச் சிறப்பாய்.

2-1-3

முன்னிரண் டொன்றும் மூன்றும் முறைமையில் வீழில் அப்பா
மன்னிய வக்ரகேது வாழவே ஒட்டான் கண்டாய்
திண்ணமாய் குடும்பம் தன்னில் திகழ்ந்திடும் கலகத் தாலே
துண்ணெனப் பிரிவர் அப்பா குலம்படும் கேடுதானே

(இ-ள்) முன் இரண்டும் இடையில் ஒன்றும் முடிவில் மூன்றும் விழின், கேது கிரகம் உனக்கு வக்கரித்திருக்கிறது. நீ அதனால் இன்பம் அடைய முடியாது. மனையில் கலகம் இடமாற்றம் தவிர்க்க முடியாது. சிலரால் உனது குலத்துக்கே அவகேடு நிகழும்.

2-1-6

இரண்டொடு ஒன்று ஆறும் இணைந்துடன் விழுமே யானால்
உரமுடைச் செல்வ மெல்லாம் உன் வசமாகும் முன்னோர்
திறத்தினில் சேர்த்த சேரும் வழக்குகள் வெற்றி நல்கும்
பிறந்திடும் மதலை வீட்டில் பிணியொடு கெண்டம் நீங்கும்

(இ-ள்) அடுத்தடுத்து இரண்டு ஒன்று ஆறு விழுமானால், வினைப்பயனால் விசேஷ லாபங்களை அடைவாய். முன்னோர்களின் வழக்குகளில் உள்ள சிக்கல் ஒழியும். மனையாள் கர்ப்பவதியாவாள். குடும்பமானது ஆல்போல் தழைத்து அருகு போல் வேரோடும். உன் வார்த்தைக்கு மதிப்பிருக்கும். கெண்டாதி தோஷங்கள் நீங்கும். ஆண்டவனே உன் துணையாவான்.

2-2-1

முன்னர் ஈரிரண்டும் ஒன்றும் முறைமையில் விழுமே யானால்
எண்ணமும் துயரமெல்லாம் பரிதிகாண் பனியேயாகும்
நன்மைகொள் தொழிலில் லாபம் நற்செய்தி நாளும் கேட்பாய்
புண்ணியன் எனப்பேர் கொள்வாய் பொய் சொல்லாத தாலேயப்பா

(இ-ள்) முன்னிரு இரண்டும் பின்னொரு ஒன்றும் விழுமாயின், சூரியனைக் கண்ட பனி போல் உன் துயர்கள் அகலும். எண்ணற்ற அரிய லாபங்களைத் தொழில் மூலம் அடைவாய். எல்லா ஊர்களிலிருந்தும் மகிழ்ச்சிகரமான சேதிகள் வந்தவாறே இருக்கும். நீ சத்தியமே வாழ்க்கையாகக் கொண்டவனாக இருப்பாய்.

2-2-2

முன்வினை மூண்டதாலே மூவிரண் டதுவே தோன்றும்
நன்மையே இல்லை மற்றும் கலகத்தால் வழக்கு தோல்வி
புன்மையே நெஞ்சாய்க் கொண்டோர் புரிவர் வஞ்சனைகள் தானே
என்மையும் நன்மை உண்டோ இன்னும்நீ காலம் தாழேன்

(இ-ள்) மும்முறை இரண்டு விழின் முன் வினைப் பயன் காரணமாகக் கவலை உனக்கு மெத்தவும் உண்டு. எக்காரியமும் துலங்காது. வெற்றி தரும் வழக்காயினும் வீண் சண்டையால் தோல்வியைத் தழுவும். உன் செயல்கள் எவையும் உருப்படாது. சிறிது நாள் பொறுமையாக இருத்தல் வேண்டும்.

2-2-3

ஈரிரண் டதனோ டேயோர் மூன்றது வீழின் அப்பா
நாரியாம் வள்ளி நாதன் நயந்ததோர் கருணையாலே
நேரிலாச் செல்வம் சேரும் நினைத்ததோ பலிதமாகும்
ஊரெது சென்றாலும்மே உயர்தனம் சேரும்பாரே

(இ-ள்) முன்னிரு இரண்டும் பின்னொரு மூன்றும் விழின் எவ்வளவு சிரமமான காரியமாகினும் தவணையின்றி முடியும். தனலாபம் ஏற்படும். தொழில் அபிவிருத்தியும் அந்நிய ஊர்களில் லாபமும் அதிகரிக்கும். செவ்வேள் கருணையினால் கவலைகள் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும்.

2-2-6

முன்னிரண் டிரண்டும் ஆறும் முறையென விழின் அப்பா
மண்ணிலே எவரை நீயே நம்பிடல் கூடும்? சொன்னேன்
தன்னுடைத் தொழிலில் நஷ்டம் தாங்கொணா வழக்கும் உண்டு
பொன்னது களவுபோகும் மனைவிக்கும் தோஷம் தானே

(இ-ள்) முன்னிரு இரண்டும் பின்னொரு ஆறும் முனைந்து விழின், நீ எவரையும் நம்பாதே. அவர்களால் உனக்குத் துன்பமுண்டு. வழக்குகளும் வம்புகளும் உனக்கேன்? குடும்பத்தில் களவு போதலும் துணைவிக்கு பலவித நோய்கள் காணுதலும் ஏற்படும்.

2-3-1

முன்னொரு இரண்டும் மூன்றும் முடிவினில் ஒன்றும் வந்தால்
நன்மையே இல்லை உன்னை நட்பொடு சுற்றம் எல்லாம்
புன்மையாம் மோசம் செய்வர் பொன்பொருள் விரயம் ஆகும்
தன்னுறு தொழிலில் நஷ்டம் உற்றவர் பிரிவர் துன்பே

(இ-ள்) முன்னர் இரண்டும் பின்னர் மூன்றும் அதன் பின் ஒன்றும் விழின், உன் சுற்றத்தினர் உன்னை மோசம் செய்யவே எண்ணுவர். நண்பர்களும் அவ்வாறே. உன் பொருள் விரயமாகும், தொழிலில் நஷ்டமும், கஷ்டமும்

காண்பாய். உனது அன்பிற்குப் பாத்திரமானவர்களும் உன்னை விட்டுப் பிரிவர்.

2-3-2

இரண்டு மூன்று இரண்டே வீழ்ந்தால் எண்ணமும் பலிதமாகும்
இரண்டென மனைவி கொள்வாய் எதிரின்றி வாழ்வையப்பா
முரண்டெழு பகையும் நாசம் முன்னோர் தம் பொருளும் சேரும்
வரந்தரு குலதெய்வங்கள் வாழ்ந்திடப் பொருளை ஈயும்

(இ-ள்) முன்னிரண்டும் முடிவில் இரண்டும் இடையில் மூன்றும் விழின், முன் மறைந்த பொருள் உன்னதாகும். எதிரியின்றி இன்னலத்துடன் வாழ்குவை. இரு தார யோகமுண்டு. அநேக புத்திரர்களும் வாய்ப்பர். பகை பூண்டோடு அழியும், உன் குடும்பத்தில் மடிந்த குல தெய்வங்கள் உனக்குப் பக்கபலமாய் இருக்கும்.

2-3-3

இரண்டொடு இருமூன்றாயின் ஏன்றதோ துன்பந் தானே
உருண்டிடு உலகந் தன்னில் உன்பெயர்க் கேடதாகும்
திரண்டதோர் தனமும் பாழாம் தீபன நோயின் துன்பம்
வரண்டிடும் அறிவும் துன்பம் வாட்டலால் உண்மை தானே

(இ-ள்) முன்னிரண்டும் பின்னிரு மூன்றும் விழின், மனதைக் குலைக்கும் கொடிய துன்பங்கள் நேர்ந்து கவலையுண்டாக்கும். பழியினை ஏற்படுத்தும். குபேர சம்பத்துள்ள குடும்பமாயினும் குசேலனைப் போல் தத்தளிக்கும். செல்வமழியும். பிணித் தொல்லை பெருகும். பொருட் சேதமும் உண்டு. மனமானது மருகும். சுய புத்தி இல்லாதொழியும்.

2-3-6

இரண்டுமுன்றாறு மானால் என்றுமே கவலை இல்லை
திரண்டிடும் செல்வம் நாளும் தீர்ந்திடும் கடனும் இல்லில்
உரன்தரு செல்வ மோங்கி ஒழிந்திடும் வறுமை தன்னை
திறன்பெறு தொழிலில் மேன்மை தீய்ந்திடும் துன்பந்தானே

(இ-ள்) முன் இரண்டும் பின் மூன்றும் இறுதியில் ஆறும் விழின், சூரியனைக் கண்ட பனி போல எல்லாவித இடர்களும் நீங்கும். தனலாபம் ஏற்படும். மேன்மைமிக்க தொழிலும், எல்லாவிதக் குற்றங்கள் நீங்குதலும், பிணி யகலுதலும், கடன் தீரலும், தந்திரம் நீங்குதலும் உண்டாகும்.

2-6-1

இல்லறத் துன்பம் ஏது இரண்டொடு ஆறும் ஒன்றும்
வல்லதாய் விழுந்த தானால் வாய்த்தவன் தனவான்
அன்றோ
நல்லதே பயணம் போதல் நாடிய மணமும் கூடும்
தொல்லைகொள் நோயும் தீரும் துணிவோடு சுகமும்
உண்டே

(இ-ள்) முன் இரண்டும் பின் ஆறும் பின்னொன்றும் விழின், குடும்பத்தின் துன்பங்கள் விலகும், செல்வனாக வாழும் வாழ்வு ஏற்படும். குடும்பத்தில் திருமணம் கை கூடிவரும். பிணியகலும், வெளியூர்ப் பயணம் நன்மை யையே தரும். பேர் பிரசித்தமாகும்.

2-6-2

ஆயதோ ரிரண்டும் ஆறும் அதனொடு இரண்டும்
வீழ்ந்தால்
ஏயதோர் பொருளும் நட்டம் நிந்தையே தொழிலில் தோற்றும்
மாயமாய் வஞ்சர் தம்மால் கலகமும் விரோதம் கூடும்
தூயவ இறைவன் தன்னைத் தொழுதிடு நன்மை உண்டே

(இ-ள்) முன்னும் முடிவும் இரண்டும் இடையில் ஆறும் விழின், கவலையே உண்டாகும். பொருளழிவு ஏற்படும். பழிச் சொற்கள் வாட்டும், பெயர் கெடும், சில நபர்களால் வம்பு வழக்குகளும் உண்டாம், இறைவனை மறவாது நினைப்பின் இடர்களெல்லாம் மதியினைக் கண்ட இருள் போல ஓடி ஒளியும்.

2-6-3

இரண்டொடு ஆறும் மூன்றும்இனிதேன விழுந்தானால்
திரண்டிடும் மனைமாண் பூமி மாட்டேனும் செல்வ மோங்கும்
உரன்தரு எண்ணம் எல்லாம் உயர்வகை பலிதம் ஆகும்
துறந்தவர் வருவர் தாமே துறவியும் உரைத்திட்டாரே

(இ-ள்) முன்னிரண்டும் பின் ஆறும் முடிவில் மூன்றும் வீழுமாயின், முன்னோர்கள் தேடி வைத்த பொன், பொருள், பூமி, சேரும். தன லாபம் பெருகும். கால் நடைகள் வாங்கப் பால் பாக்கியம் பெருகும். எண்ணம் விரைவில் ஈடேறும். கவலையை ஒழிக்கவும். வீடு விட்டுச் சென்றோரும் வந்து சேர்வார்கள்.

2_6_6

இரண்டொடு ஈராறாயின் ஏன்றிடும் துன்ப மப்பா
முரண்தரும் எடுத்தவேலை; மூளுமே சண்டை வீட்டில்
திறனுடை மனதென்றாலும் தீய்த்திடும் தொல்லை வீணே
வரம்தரு குலதெய்வத்தை வழுத்திடப் புகலுண்டாமே.

(இ-ள்) முன்னிரண்டும் பின் இரு ஆறும் வீழின், எச்செயலை நினைத்து மேற்கொண்டாலும் தாமதமாகவே பலிதம் ஏற்படும். குடும்பத்தில் கலகமும், சண்டையும் நிகழும். பல விதத்திலும் துன்பங்கள் தொடரும். என்றாலும் உன் குல தெய்வத்தையோ நவக்கிரகத்தையோ பூஜை செய்ய நலமே விளையும்.

3-1-1

மூன்றொடு ஒன்றும் ஒன்றும் முயற்சியால் வீழு மானால்
தான்தொழு தெய்வத்தாலே தனலாபம் கிட்டும் பாரே
சான்றதோர் தொழிலில் லாபம் ஆயுளும் தீர்க்க மாகும்
ஆன்றதோர் குடும்பம் தன்னில் அடுத்திடும் பெருமை தானே

(இ-ள்) முதலில் மூன்றும் பின் இரண்டு ஒன்றுகளும் வீழின், இறையருளால் வேண்டுவனவற்றைப் பெறலாம்.

தனலாபமும், குடும்ப அபிவிருத்தியும் தொழில் மேன்மையும் தீர்க்க ஆயுளும் விக்கினமின்றி நிகழும்.

3_1_2

முன்றொடு ஒன்றும் ரெண்டும் முறைமுறை வீழு மானால்
தோன்றிடா நன்மை எண்ணம் துவண்டிடும் தோல்வியாலே
ஆன்றதோர் சகாய மில்லை ஆயுளும் அற்ப மில்லை
ஈன்றதன் மக்கள் தாயோ டுன்னையே வெறுப்பா ரன்றோ?

(இ-ள்) முன்னொரு மூன்றும் முடிவில் இரண்டும் இடையில் ஒன்றும் வீழின், எதை நினைப்பினும் எண்ணம் ஈடேறாது. பெண்டு பிள்ளைகள் தூஷணை செய்து வெறுப்பர். உன் சொற் கேளார், எவருடைய உதவியையும் நீ அடைய இயலாது. பிணி உனக்குச் சோதனையாயினும் ஆயுள் அற்பமாகாது. சில நாள்களில் துயரகலும்.

3_1_3

சஞ்சலம் நீக்கு மூன்று ஒன்றொரு மூன்றும் வீழ
வஞ்சகம் செய்வோர்தாமும் வகையற்று ஓடிப் போவார்
கிஞ்சுகச் சிறைப்பொன் சேரும் கேடுகள் நீங்கிப் போகும்
அஞ்சுதல் வேண்டா நீயும் அனைத்திலும் லாபந் தானே

(இ-ள்) முன்னும் முடிவும் மூன்றும் இடையில் ஒன்றும் வீழின், உன் கவலைகள் அனைத்தும் சூரியனைக் கண்ட பனியென நீங்கும். எல்லாமே நன்மையாக முடியும். உனைக் கெடுக்க நினைத்தவர்கள் கெட்டழிந்து போவார்கள். உனக்கு எல்லா விதத்திலும் லாபமுண்டு.

3_1_6

முன்றொடு ஒன்றும் ஆறும் முறையாக விழுமே யானால்
தோன்றிடும் பகையும் நட்பால்தொடர்ந்திடும் துன்பம்மேலும்
முண்டதோர் சினத்தை நீக்கு முரண்பெறு கோளின் துன்பம்
தாண்டியே சின்னாள் போனால் தனித்திடும் சுகமே உண்மை

(இ-ள்) முன்னால் மூன்றும் இடையில் ஒன்றும் முடிவில் ஆறும் வீழின், நண்பரால் துரோகம் நேரலாம். நீ சினங் கொள்ளாதே. கோள்களின் குணக்கேடால் உன் குணமும் கெடும். உன் முகத் தோற்றமே மாறுபாடாகத் தோன்றும், சற்றுப் பொறு. சில தினங்களில் சுகமுண்டு.

3-2-1

முன்னொரு மூன்றும் ரெண்டும் மேலுமோ ரொன்றும் வீழின்
தன்னுடைத் துயரம் தானும் தாங்கொணா தாகிப் போகும்
தன்னுடை வாக்கும் பொய்க்கும் பகையோடு நோயும் வாய்க்கும்
பொன்பொருள் விரயமாகும் புரிகுவை பூசை தானே

(இ-ள்) முன்மூன்றும் பின் இரண்டும் பின் ஒன்றும் முறையே வீழின் மிகுதியான துன்பம் உண்டாம். மனை மாட்சி கெடும். நாணயம் தவறுதல் நேரும். தீராப் பகையும் கொடுமையான நோயும் கைப்பொருள் விரயமும் உண்டாகும்.

3-2-2

மூன்றொடு இரண்டும் ரெண்டும் முறை முறை வீழுமானால்
தான்றணிப் போன ஜீவன் தெற்கினில் இருந்து தோன்றும்
ஆன்றதோர் கவலை இல்லை அனைத்துமே நன்மை யாகும்
ஆன்றவர் நேசம் வாய்க்க அகிலத்தில் சிறந்து வாழ்வாய்

(இ-ள்) முன்மூன்றும் பின்முறையே இரண்டிரண்டும் தொடர்ந்து வீழின், இனி உனக்கு நலம் பயக்கும் நற்பலன்களே அதிகம் நிகழும். தென் திசையில் நீயே எதிர்பாரா வண்ணம் தேடிப் போன ஜீவன் கிடைக்கும். உன் இடர் நீங்கி இப்பூவுலகில் இன்னலம் கொண்டு வாழ்வாய்.

3·2·3

முன்னொரு மூன்றும் இரண்டும் முடிவிலோர் மூன்றும் வீழின்
உன்னுடைக் குடும்பம் மோச மானதோர் நிலையில் உண்டே
வன்மனக் கசடர் வஞ்சர் இவர்களால் நஷ்ட முற்றாய்
கொன்றிட நினைப்பர் நேசம் நீக்குவை துதிக்க தெய்வம்

(இ—ள்) முன்மூன்றும் இறுதியில் மூன்றும் இடையில் இரண்டும் வீழின் உன் குடும்பம் இழிவான நிலையில் உயிர் வாழ்கிறது. வன்னெஞ்சர்களாலும் வலியபகையாலும் நீ பொருளினை இழந்து பரிதவிக்கிறாய். உன்னைத் தீர்த்துக் கட்டவும் தயாராக உள்ளனர். அதனால் யாரிடமும் உறவு கொள்ளாதே.இறைவனைத் துதிக்கின் நலமுண்டாகும்.

3_2-6

மூன்றொடு இரண்டும் ஆறும் முன்னியே வீழு மாயின்
மூண்டது நல்ல நேரம் முன்வினை என்று நீயும்
ஏன்றதோர் மூர்க்கத் தாலே ஏசிடா திருப்பாய் அப்பா
ஆன்றன லாபம் தான்யம் அதனொடு குடும்ப மேன்மை

(இ—ள்) மூன்றும் இரண்டும் ஆறும் முறையே வீழின், உனக்கு நல்ல நேரம் தொடங்கியுள்ளது. இதனைக் கவனியாமல் நீ துன்பகாலத்தையே நினைத்து நிஷ்டூரமாகப் பேசாதே. நாளுக்குநாள் தனலாபம் பெற்று, பயிர் வளமையோடு, மனைமாட்சியும் மேன்மையும் பெறுவாய்.

3-3-1

இருமுறை மூன்றும் இன்னும் ஒருமுறை ஒன்றும் வீழின்
இரு நிலம் தன்னில் நல்ல இன்பமாம் வாழ்வே யப்பா
கருமனம் பழிசொல் வாரும் கருத்தழிந் திடரே கொள்வார்
அரும்பொனும் மணியின் ஆரம் அனைத்துடன் மகிழ்ந்து
வாழ்வாய்

(இ—ள்) முன்னிரு மூன்றும் பின்னொன்றும் விழின் புவனமதில் எல்லா நலன்களையும் பெற்று இன்புறுவாய், உன்னை இழித்தும் பழித்தும்பேசியவர்கள் பாழாவார்கள். பொன்னும் பொருளும் ஆபரணங்களும் சித்திக்கும். மிகவும் மகிழ்ச்சி கரமான வாழ்வு அமையும்,

### 3_3–2

முன்னிரு மூன்றும் பின்னர் இரண்டென வீழ்ந்ததப்பா
முன்னிடும் கவலை துன்பம் முயன்றன பலியாதப்பா
பன்னக விஷமே போல பந்துக்கள் உன்னைப் பார்ப்பார்
எண்ணரு கஷ்டம் உண்டாம் விரயமும் காணுமப்பா

(இ—ள்) முன்னிரு மூன்றும் பின்னிரண்டும் விழின் மனக்கவலையும் எண்ணம் ஈடேறாமையும் உனக்கு ஏற்படும், சுற்றத்தினர் உன்னை விஷத்தைப் போல் நோக்கு வார்கள். துன்ப துயரங்கள் இருக்கும்.

### 3-3–3

மும்முறை மூன்று வீழின் மூண்டது நல்ல காலம்
உம்மையே நோக்கித் தெவ்வர் அஞ்சியே அலறுவார்கள்
கொம்மெனும் சபையில் ஏற்றம் குழந்தைக ளாலே இன்பம்
அம்மவுன் குலதெய் வங்கள் அனைத்துமே தந்த தப்பா

(இ—ள்) மும்முறை மூன்று விழுந்ததால், இன்று முதல் உனக்கு நல்லயோகமே. பகைவர்கள் உன்னைக் கண்டு பயப்படுவர். உன் பேச்சுக்கு எதிர் வாதம் எச்சபையிலும் உனக்கு இராது. சுகமும் பெரும் பேறும் செல்வாக்கும் புதல்வர்களால் உனக்கு உண்டு. குலதெய்வங்களின் அருளாசி உனக்கு எப்போதும் உண்டு.

### 3-3–6

நல்லகோள் அனைத்தும் இன்று வக்கரித் திருப்பதாலே
நல்லதோர் மூன்றும் மூன்றும் பின்னொரு ஆறும் வீழ்ந்தால்
வல்லதாய் வாணிபந்தான் வாடிடும் கவலை யுண்டாம்
வல்லதாம் உயிர்கள் நஷ்டம் நலிவுதான் மெத்தவுண்டே

(இ—ள்) உனக்குரிய நற் கோள்கள் எல்லாம் வக்ர கதியிலிருப்பதால் முன்னிரு மூன்றும் பின்னொரு ஆறும் விழுந்தது. இதனால் செய்தொழில் நஷ்டம் காணும். பல விதத்துன்பங்கள் மனதைக் குலைக்கும். நாற்கால் ஜீவன்கள் பல நஷ்டமாகும்.

## 3_6_1

மூன்றொடு ஆறும் ஒன்றும் முறைமையில் வீழ்ந்ததப்பா
மூண்டது துன்பம் நஷ்டம் முடிபொருள் விரைய மாகும்
ஆன்றவ ரல்லார் துன்பம் அகத்தினில் மனச் சலிப்பும்
ஏன்றன செய்யின் துன்பம் நவகோளைப் பூஜை செய்யே

(இ—ள்) முன் மூன்றும் பின் ஆறும் பின் ஒன்றும் விழுந்ததால், பல விஷயங்களில் கஷ்டமும் நஷ்டமும் மனக்கிலேசமும் அடைவாய் தீயோர்களின் உபாதையும் மனையில் சலிப்பும் சோகமும் மிகும் மனம்போன போக்கில் நீ நடந்தால் பல வித இடையூறுகள் ஏற்படும். நவகோள்களை மிகுந்த சிரத்தையுடன் பூஜித்துவர நலம் விளையும்.

## 3_6_2

முன்மூன்று ஆறு இரண்டு முன்னிலே விழுந்த தாலே
முன்னேற்ற வாழ்வும் உண்டாம் முபன்றன பலிதமாகும்
எண்ணரு அறமே செய்து எவரையும் ஆதரிப்பாய்
பண்ணரு தானம் செய்யப் பாரினில் நன்மை உண்டே

(இ—ள்) முன்மூன்றும் பின் ஆறும் பின்னிரண்டும் தொடர்ந்து உனக்கு விழின், நீ அதிர்ஷ்டசாலி. கொஞ்ச நாளில் மிகப்பிரபலமான யோகத்தை அனுபவிப்பாய். பிறரை ஆதரிக்கும் பெருங்குணம் உனக்குஏற்படும். வறுமையுற்றார்க்கு இயன்ற தானம் செய்ய நலம் மிகவுண்டு.

## 3-6-3

அருமையாம் மூன்றும் ஆறும் அதனோடு மூன்றும் வீழ்ந்தால்
வறுமைதான் திசைதாம் அப்பா வாட்டமே தொழிலில்நஷ்டம்
பெருமையாம் பொருளும் நஷ்டம் பேதலித்திடுமே புத்தி
ஒருமையாம் மாதம் போனால் உன்னத வாழ்வு நேரும்

(இ—ள்) உனக்கு முன்னும் முடிவும் மூன்றும் இடையில் ஆறும் விழுந்ததால், உனக்கு வறுமையே மிகும். உன் அறிவுக்கு எதுவுமே புலப்படாது தொழிலில் விரயம் ஏற்படும். கொடிய நோய்கள் பல பற்றும். இவை 30 நாள் களுக்குப் பின்னர் மாறுபாடாகும்.

## 3_6_6

முன்னொரு மூன்றும் பின்னர் முடிவினில் இடையில் ஆறும்
முன்னியே விழுந்த தாலே முயன்றன முடியுமப்பா
உன்மனை மணமும் கூடும் ஒழிந்தன பீடையாவும்
என்றுமே இன்பமாக இருந்திடும் வாழ்க்கையப்பா

(இ—ள்) முன் மூன்றும் பின்னீராறும் விழுந்ததால், உன் எண்ணங்கள் ஈடேறும். குடும்பத்தில், திருமணம் கை கூடி வரும். உனக்குற்ற தீமைகளெல்லாம் இன்றுடன் ஒழிந்தது. இனி உனக்கு அதிர்ஷ்டமும் நன்மையுமே உண்டாகும்.

## 6_1_1

ஆறொடு ஒன்றும் ஒன்றும் அடுத்தடுத்தே விழுந்தால்
மாறிடாத் துன்பம் மன்னும் மாண்பொருள் அழியுமப்பா
வேறுபல் வகையில் துன்பம்வேணபேர் பகையு மாகும்
ஓரிரு வாரம் போயில் உரைக்கலாம் நன்மைதானே

(இ—ள்) உனக்கு முன் ஆறும் பின் இரண்டு ஒன்றும் விழுந்ததால், துன்ப துயரங்கள் தொடரும்- விரயம் ஏற் படும். அரிதில் தேடிய பொருளும் விரைவில் அழியும். நண்பர்கள் விரோதியாவதையும் தவிர்க்க முடியாது 14 நாள்களுக்குப்பின் நற்பலன் உண்டாம்.

### 6-1-2

முதலிலே ஆறும் பின்னர் முடுகிய ஒன்றும் இரண்டும்
நுதலியே விழுமே ஆனால் நும்மனத் தெண்ணம் வெற்றி
நுதலிய தொழிலில் லாபம் நும்மனைத் தொல்லை தீரும்
நுதலியே சொன்ன உண்மை சிலதினம் சென்று காண்க

(இ—ள்) முன் ஆறும் இறுதியில் இரண்டும் இடையில் ஒன்றும் விழுந்ததால் செய்தொழில் விருத்தியும் லாபமும் உண்டாம். எண்ணியன ஈடேறும். குடும்பத் தொல்லைகள் எல்லாமே நீங்கும். சில நாளில் இதன் உண்மை உனக்கு நன்கு புரியும்.

### 6-1-3

ஆறொடு ஒன்றும் மூன்றும் அடுத்தடுத்தே விழுந்தால்
கோரிய எண்ணம் தோல்வி கொள்பொருள் நாசமாகும்
நேரிய பொல்லாப் பாகும் நினைத்தன உருப்படாது
ஆரிய அஞ்சிடாதே அருவினை பூசை கொள்க

(இ—ள்) முன் ஆறும் இடையில் ஒன்றும் இறுதியில் மூன்றும் விழுந்ததால் நீ நினைத்த எண்ணம் பலிக்காது. நீ தேடிய பொருள் விரையமாவது உறுதி. பழியே உனக்கு மிஞ்சும். எண்ணம் ஈடேறாவிடினும் அஞ்சுதல் சிறிதும்தேவையில்லாததே.

### 6-1-6

முன்னும் முடிவும் ஆறாகி இடையில் ஒன்று விழுமாயின்
மன்னும் நோயும்வறுமையதும் மனைவிட்டோடும்பீடையுடன்
என்னும் செயலேவெற்றிதரும் இனியுன் பகைவர் ஒழிவாரே
பொன்னும் பொருளும் வரத்தாகும் புதிய நட்பும் நிலம்
செழிக்கும்

(இ—ள்) முன்னும் முடிவும் ஆறும் இடையில் ஒன்றும் வீழின், இதுவரை உனைத்தொடர்ந்த பீடைகள், பிணிகள், வறுமை நீங்கும். வழக்குகளும் வம்புகளும் அறவே இல்லாது

ஒழியும். வன்னெஞ்சரின் பகையும் அழியும். பயிர் நிலம் செழிக்கும். தானியம் கொழிக்கும். புதிய நண்பர்கள் நட்பால் தனலாபம் உண்டாகும்.

6-2-1

ஆறுடன் இரண்டும் ஒன்றும் வீறுடன் விழுமேயானால்
காரியம் தன்னில் வெற்றி கணபொருள் லாப மாகும்
சீரிய சிறுவர்க் கல்வி செழித்திடும் கன்று காலி
தேரிட லாபம் பின்னும் சென்றவர் மீளு வாரே

(இ—ள்) முன் ஆறும் பின் இரண்டும் அதன்பின் ஒன்றும் விழுந்ததால்,எடுத்த செயல்களிலெல்லாம் நிறைந்த லாபமும், சிறுவர்களுக்கு கல்விஞானமும், மாடு மனை கொள்ள நல்லூழும் சித்திக்கும். மனம் வெறுத்துச் சென்றவர்களும் திரும்பி வந்து சேருவர். துயர்கள் தீரும்.

6-2-2

ஆறுடன் இரண்டுரெண்டு அடுத்தடுத் தமருமாயின்
சீரிய நண்பர்கூட சீறுவர் பகையாய் பாம்பாய்
தேருமோர் நன்மை செய்யின் பழியதே வந்து சேரும்
சேருமே வறுமை நாளும் செய்நிடு பூசை தானே

(இ-ள்) பின் ஈரிரண்டும் முன் ஆறும் விழுந்ததால், நண்பர் பகையாவர். எந்நன்றி செய்யினும் பயன்தராது. உன் நன்மைகள் நீங்கிப் புன்மையே மேலோங்கும். வறுமை வாட்டும்.

6 2-3

ஆறொடு இரண்டும் மூன்றும் அடுத்துமே விழுந்த தப்பா
பேறெலாம் உனக்கு உண்டு பேசரிய லாபம் உண்டு
சீரெலாம் குடும்பம் காணும் செழித்திடப் பொருளும் சேரும்
தேறிய மருந்தால் நோயும் தீர்ந்திடும் நன்மை உண்மை

(இ—ள்) முன் ஆறும் பின் முறையே இரண்டும் மூன்றும் விழுந்ததால், கொஞ்ச நாள்களில் நீ தனவந்தனாவாய். குடும்பக் கவலைகள் நீங்கி இன்பத்தை ஏற்படுத்தும். பொன்னாபரண சேர்க்கையுண்டாகும். நிறைந்த நன்மை பயக்கும். உடலில் ஏற்பட்ட நோய் மணி மந்திர ஔஷதங்களால் நீங்கும். நற்கோள் பார்வையுள்ளது நலமே.

## 6-2-6

ஆறுடன் இரண்டும் ஆறும் அரவென விழுந்த தாலே
வீரிய கிரக பார்வை வேண்ணதை வேட்கச் செய்யும்
மாறிடாக் கவலை நெஞ்சில் மல்கிடும் பாவி என்பார்
ஆறிடு செல்வ மாகும் அடுத்திடும் நன்மை சின்னாள்

(இ—ள்) முன்னும் முடிவும் ஆறும் இடையில் இரண்டும் விழுந்ததால் வெகு துயரம் ஏற்படும். தீக்கோளின் கோளாறினால் பொருளை இச்சிக்கச் செய்யும். சண்டாளன் என்ற பெரெடுக்கச் செய்யும். சில தினங்கள் செல்லின் நன்மையுண்டு.

## 6-3-1

உதயமாம் ஆறும் மூன்றும் அதனோடு ஒன்று மானால்
இதயமே கவலை யாலே ஏக்கரும் குரும்ப ராலே
நிதமொரு கலகம் காணும் நீள்மனை தன்னில் கஷ்டம்
இதமிலாத் தொழிலால் நஷ்டம் நோயொடு கடனால் நஷ்டம்

(இ—ள்) உனக்கு முன் ஆறும் ஈற்றில் ஒன்றும் இடையில் மூன்றும் வந்ததால் பூமியில் மிகவும் துயருற்றவனாக இருப்பாய்—தீம்பு பேசும் வம்பர்களால் குடும்பத்தில் கலகம் விளையும். வாணிபத்தில் விரையம் ஏற்படும். சேமிப்பு கரைந்து போம். கடன் படவேண்டி வரும். கொடுமையான பிணிகள் சம்பவிக்கும்.

## 6-3.2

ஆறொடு மூன்றும் ரெண்டும் அப்பனே விழலும் ஆச்சு
சீரொடு நல்ல காலம் சிறப்பொடு வருக லாச்சு
வேரொடு கவலை நீங்கும் விட்டபொன் மீட்டும் சேரும்
சீரோடு வாழ்வாய் புத்ரப் பேறொடு புகழும் தானே

(இ—ள்) உனக்கு முதலில் ஆறும் முறையே மூன்றும் இரண்டும் வந்ததால், இனி யோக காலமே. துன்ப துயரங்கள் அற்றுப் போகும். இழந்த பொருள் விக்கின மின்றி வந்து சேரும்; மிகுதியான செல்வாக்கும் நல்வாழ்வும் பெறுவாய். புத்திரோற்பத்தியால் புகழுடன் வாழ்வாய்.

## 6-3-3

முன்னாறு இருமூன்று முறைமையாய் விழுமேயானால்
எண்ணாத துயரெல்லாம் எற்குவை உண்மை யப்பா
நண்ணாது அன்பும் மற்றும் நல்ல ஆதரவும் இல்லை
எண்ணாது பழியும் சேரும் பிணியொடும் சண்டை தானே

(இ—ள்) முன் ஆறும் பிறகு முறையே இருமூன்றும் வந்ததால், அன்பு ஆதரவு ஆகிய இவற்றைக் குடும்பத்திலிருந்து அழிவுறச் செய்யும். கடுமொழியும் பழிகளும் ஏற்படும். மனக்கவலை தரும் பிணிகள் உண்டாகும். வம்புச் சண்டைகளில் ஈடுபடுத்தும்.

## 6-3-6

ஆறொடு மூன்றும் ஆறும் அடுத்துமே விழுமேயானால்
வேறினிக் கஷ்டம் இல்லை வேணது மனம்போல் ஆகும்
சீரொடு சிந்தித் தாய்வாய் செழித்திடும் கலகம் நீங்கும்
சீரென மணமே கூடும் வலத்தினில் மச்சம் பாரேன்

(இ—ள்) முன்னும் இறுதியும் ஆறாகி இடையில் மூன்று வீழின், இனித்துயரில்லை. எண்ணம் ஈடேறும். படபடப்பு தேவையில்லை. மனையில் கலகங்கள் ஒழியும். திருமணம்

கூடும். வாணிபம் பெருகும். உனக்கு அதற்கு அடையாள மாக வலப் பக்கத்தில் மச்சமிருக்கும். அதனால் மிகவும் அதிர்ஷ்டமே.

### 6-6-1

திடமென ஆறும் ஆறும் அடுத்தொரு ஒன்றும் வீழ
இடம்விட்டு ஓடச்செய்யும் ஏன்றதோர் லாபம் காண்பாய்
திடம்இது கன்றுகாலி செழுமனை பூமி லாபம்
இடம்இது என்றுதோண்ட இன்சுவை நீரில் லாபம்

(இ—ள்) முறையே உனக்கு இரண்டு ஆறும் பின்ஒன்றும் விழுந்ததால், இடம் மாறிச் செல்லச் செய்யும். அதனாலும் மாடுமனை கொள்வதாலும் லாபமே ஏற்படுத்தும். நிலம் செழிக்கும். கிணறு தோண்ட நீர் ஊறும். மிகுதியான தன லாபமும் உண்டாகும். உன் எண்ணமெல்லாம் ஈடேறும்.

### 6-6-2

ஆறொடு ஆறும் ரெண்டும் அடுத்துமே விழுமே யாயின்
மாறிடாக் கெட்ட காலம் மனிதர்பொய் சாட்சி சொல்வர்
தேறிய தொழிலில் கஷ்டம் செழுமனை மக்கள் நோயால்
தேறிடா நஷ்டம் உண்டே தெளிகஉன் ஆசை பாழாம்

(இ—ள்) இரண்டு ஆறும் மற்றும் இரண்டும் முறையே விழுந்தால், உனக்குக் கெட்ட காலமே. வீண்பழி கூறி (பொய் சாட்சி) உனக்குத் தீம்பு செய்வார்கள். செய் தொழிலில் விரயம் காணும். பெண்டு பிள்ளைகளுக்குப் பிணிகள் ஏற்படும். பின் மருந்தால் நீங்கும். மனதில் சஞ்சலம் மிகும். உன் ஆசை நிராசையாகும்.

## 6-6-3

ஈராறும் ஒருமூன்றும் இணைந்துடன் விழுந்ததாலே
சீரோடு வாழ்வாய்நீ செல்பொருள் தொழிலும் ஜீவன்
சீரோடு விரையும் உண்மை க்ஷேமமே பாக்யம் காண்பாய்
ஈராறு கரத்து வள்ளல் இணையறு கருணை காக்கும்

(இ—ள்) உனக்கு முறையே இரண்டு ஒரு ஆறும் மூன்றும் விழுந்ததால் இழந்த பொருளோ, தொழிலோ, ஜீவனோ விரைவில் தானே வந்து சேரும். சகல பாக்கியங் களும் பெற்று சந்தோஷமாக வாழ்வாய். முன்னோர் சொன்ன சொல் என்றுமே பொய்யாவதில்லை.

## 6-6 6

மூவாறு முறையே தோன்றின்
மூண்டது கிரக குற்றம்
தீயானும் ஆறா வஞ்சர்
சேர்வாரே குடியைத்தீய்க்க
போடாறும் மார்க்கம் இல்லை
புகலினி என்ன உண்டு
தீயாடி தன்னையே போற்றி
தேருக; நஷ்டம் தானே

(இ—ள்) நல்ல கிரகங்கள் எல்லாம் உன்னைப் பாழ் படுத்தப் பகையாயின. அதனால்தான் முறையே மூன்று ஆறு விழுந்தது. வஞ்சகத்திட்டம் உன்னை வஞ்சிக்கக் காத் திருக்கிறது. எச்சரிக்கை! உனக்கு இறக்கமே ஏற்படும். வறுமை தொற்றும். உன் பெயரும் செல்வாக்கும் கெடும். பலவிதத்திலும் உனக்குத் துயரமே மிகும்.

பாய்ச்சிகை சாத்திரம் முற்றிற்று.

# நட்சத்திர சாத்திர பலன்

## அஸ்வினி

பெற்றியுடை அஸ்வினி ஆரூடமாகில்
பெருவயிறன் கணபதிநன் அருளினாலே
தொட்டெதனைச் செய்தாலும் பலிக்குமப்பா
துயரில்லை நோய்விலகும் நன்மை சேரும்
திட்டமுடன் பொன்பொருளும் வந்து சேரும்
தீரமுடைப் பாலகனும் பிறக்கும்பாரே
திட்டமிட்ட குடும்பமது செழித்து வாழும்
வெற்றியொரு வாரமதில் கண்டிடாயே

யானைமுகக் கடவுள் அருளினால் அசுவினி நட்சத்திரம் வந்ததால் விக்னமின்றி எடுத்த எக் காரியமும் முடிவுறும். துன்புறுத்திய கொடிய நோயும் மருந்தினால் ஒழியும். குடும்பத்தில் புத்திர விருத்தி ஏற்படும். ஒற்றுமை மிகுந்து குடும்பம் மேன்மையான பெயரைப் பெறும். விட்டோடிப் போன பொருளோ ஜீவனோ மீண்டும் வந்து சேரும். எட்டு தினங்கள் போனால் நீ உன் துயர்கள் அனைத்தும் நீங்கி இன்பமடைவாய்-உத்தமம்.

## பரணி

அடுப்பென்ற பரணியது அடுக்குமாகில்
அடுத்திடுமே குடும்பத்தில் கவலை சூழும்
எடுத்ததொரு பெண்பிள்ளை பகையதாகும்
ஏற்றதொரு வாக்குவாதம் போலேயாகும்
அடுத்ததொரு சிநேகிதரும் பகையாய் ஆவர்
அடுத்துதவி செய்தாலும் அதர்மமாகும்
கொடுக்குமொரு குலதெய்வம் துணையும் போகும்
கொடுமையெலாம் வாரமெட்டில் தீரும்தீரும்

பரணி ஆரூடமாக வந்ததால் பல வகையிலும் துன்பமே அதிகரித்துக் காணும். பெண்டுபிள்ளைகளும் சண்டையிட்டுப் பகைப்பர். நண்பராலும் தீமையேயுண்டு. நன்மை செய்தாலும் பொல்லாப்பே ஏற்படும். ஓயாத அலைச்சல் உண்டு. பிறருக்கு உன் பேச்சு விஷமாகும். நீ

வணங்கும் தெய்வங்களும்கூட உன்னைவிட்டு விலகி நிற்கும். எனினும் இரண்டு மாதங்கள் போனால் உன் தடைகள்விலகி நன்மை ஏற்படும். இது மத்திபம்.

## கிருத்திகை

கார்த்திகைதான் ஆருட மாச்சு பாரு
கஷ்டமுற்றாய் ஈராண்டாய் இன்னும் கேளு
கீர்த்தியெல்லாம் அழிந்ததனால் சிந்தை நொந்தாய்
சென்மமதில் கொடியசெவ்வாய் அமர்ந்ததாலே
பேர்த்துமொரு போராட்டம் குடும்பந்தன்னில்
பேறான பொன்பொருளும் தொழிலும் நஷ்டம்
வேர்த்துமனம் வாடாதே விடிவுகாண்பாய்
வென்றிடுவாய் வாரமொரு மூன்றில்தானே

கார்த்திகை நட்சத்திரம் உதயமானதால் நீ மனக் கவலையால் மருகுகிறாய். குடும்பச் சுகமில்லை. சுற்றமும் உன்னைக் கைநழுவ விட்டார். இருபத்து நான்கு மாதங் களாக சொல்லமுடியாத கஷ்டங்களைஏற்று அனுபவித்திருக் கலாம். பொல்லாத பிணியால் பொருள்சேதம் உண்டாகி யிருக்கலாம். இடம்பெயர்ந்தின்னலுற்றிருக்கலாம். பொன் பொருள் விரையமாகியிருக்கலாம். ஜென்ம செவ்வாய். எனவே இவை நிகழ்ந்தன. இன்னும் இருபத்தியொரு தினங் களில் அவன் நீங்குகிறான். அதன்பின் நன்மை, இது மத்திபம்.

## ரோகிணி

உரோஹிணிதான் ஆருடம் உதயமானால்
உயர்குருவும் பஞ்சமத்தில் உதவவந்தார்
ஒரேவழியாய் வந்ததுன்பம் விலகிப் போகும்
உறவாவர் நெடுநாளைப் பகைவர்தானும்
வராதென்று போனபொருள் வந்து சேரும்
வாட்டிடுமோர் நோயில்லை மகப்பேறாகும்
தராதலத்தில் மனைவிமக்கள் உடனே வாழ்வாய்
தளர்வின்றி நவக்கிரகப் பூஜை செய்யே

ரோகிணி நட்சத்திரம் உதயமாகி பஞ்சமத்தில் பொன்னவன் இருப்பதால் பலவித நன்மைகள் ஏற்படும். மலையென வந்த துயர் பனியென விலகும். பகையும் உறவாகும். செய்தொழில் விருத்தியுண்டு. இழந்தது பொருளாயினும் ஜீவனாயினும் மீளும். புத்திரப்பேறுண்டாம். சுற்றமும் பெண்டு பிள்ளைகளும் சூழ இன்பமுடன் வாழ்வாய். எத்திசை சென்றாலும் நற்றிசையாகும். துயரும், இடரும், பிணியும் இன்னும் 14 நாள்களில் தீரும். எண்ணம் கைகூடும். இது உத்தமம்.

## மிருகசீரிஷம்

கதியான நவக்கிரக பூஜைசெய்தால்
கவலையில்லை மிருக சீரிடமேயானால்
நிதிகொண்ட அரசனென நீடுவாழ்வாய்
நிகழும்மணம் மகப்பேறும் செல்வம் உண்டே
சதிகொண்ட நோய்நீங்கித் தொழிலும் ஓங்கும்
சந்தோஷச் செய்தி வரும் தெற்கினின்றும்
பதினேழுநாள் போனால் நன்மையுண்டு
பாரினிலே குருமுனிசொல் நம்புவாயே

மிருகசிரிட நட்சத்திரம் உதயமானதால், உன் ராசிக்கு உச்சத்தில் சஞ்சரிப்பதால் பூர்வவினையும் இதுவரை அனுபவித்த இன்னல்களும் அகன்று குபேரனைப் போன்று திரண்ட செல்வத்துடன் புகழுடன் வாழ்வாய். திருமண காரியம் குடும்பத்தில் கைகூடும். பொல்லாத நோயாயினும் படிப்படியாய் பூரணமாக நீங்கும். தொழில் மேலோங்கும். தென்திசை செய்தி நன்மையே. 17 தினங்களில் உன் துயர் நீங்கி இன்புறுவாய். எண்ணம் ஈடேறும். புத்திரப்பேறுண்டாகும். இது உத்தமம்,

## திருவாதிரை

நாசமதே செய்வார்கள் நம்பினபேர்
நஷ்டம் திருவாதிரைதான் உதயமானால்
மோசமதாய் வல்வழக்கு வந்தே தீரும்
முரண்டிடுவார் கொடுத்தபொருள் கேட்டாயானால்

தேசமெலாம் பம்பரம்போல் அலைந்திட்டாலும்
திட்டமது முடியாது பகையே நேரும்
மோசமெனும் வாரமைந்தில் சஞ்சலங்கள் காணும்
மூட்டினேன் வாரமைந்தில் தனியும்பாரே

திருவாதிரை ஆரூடமாக வந்ததால், உன் ராசிகள் கொடியனவாதலால் நம்பியபேர் உன்னை வஞ்சிப்பர். குடும்பத்தில் வீண் வ்ழக்குகள் ஏற்படும். தொழிலில்நஷ்டம், வீண்பழி ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் சிக்கலும் சூழ்ச்சியும் மிகும். மேலும் பாதசனி செய்யும் தீமையினால் வீண் அலைச்சல், நிறைந்த துன்பம், நேரங்கெட்ட நேரத்தில் உணவுண்ணல், எண்ணம் பலியாமை, எல்லாவிதத்திலும் கடுமொழியும், பகையும ஏற்பட்டு மனக்கவலை தரும். 35 தினங்கள் போக நன்மையாம். இது மத்திபம்.

## புனர்பூசம்

புனர்பூசம் ஆரூடம் உதயமானால்
பொடிப்பொடியாம் கொடியபிணி கண்டம் நீங்கும்
மனைதழைக்கும் தவறேதும் நிகழ்ந்திடாது
மாடுமனை கொளலாகும் தனலாபந்தான்
கணையான வழக்கதுவும் தீருமப்பா
கடன்தீரும் சேய்பிறக்கும் தொழிலுமோங்கும்.
துணையான பெரியோர்கள் உதவியாலே
உறுதியுண்டு சிலநாளைக் கழிததிடாயே

புனர்பூச நட்சத்திரம் ஆரூடமாக உதயமானதால் மிக மோசமான ஆபத்துகளும் கொடுநோயும் கெண்டாதி தோஷம் நீங்கி குடும்பம் குறைவற்றதாகிச் செழித்து ஓங்கும். கால்நடைகள் நல்ல லாபம் தரும். நீண்ட நாளைய வழக்குகளும் முடிவுறும்—வெற்றி தரும். அந்நியர்கள், பெரியார்கள் உதவியும் புத்திரப்பேறும் உண்டாம். தொழில் விருத்தி ஏற்படும். சிவனடியார்க்கு இயன்ற உதவி புரிய எல்லாத் துயரங்களும் நீங்கி நன்மை ஏற்படும்.

## பூசம்

கழித்துவிடு இருபத்தி ஏழுநாளை
களிப்புண்டு ஆருடம் பூசமானால்
இழித்தவரும் பழித்தவரும் இருண்டே போவார்
இயல்பான பகைவருமே உறவாய் ஆவார்
தழைக்குமினி உன்குடும்பம் இன்பம் காணும்
தந்தையுடை பொருள்சேரும் நோயும் நீங்கும்
தொழிலதனில் நற்கீர்த்தி மேற்கே லாபம்
தோன்றுமுந்தன் குலதெய்வம் சுகமேநல்கும்

பூச நட்சத்திரம் ஆருடமாக வந்ததால் எண்ணிய எண்ணம் இடையூறின்றி ஈடேறும். இழித்தும் பழித்தும் பேசிய பகை பூண்டற்றுப் போகும். பகைவர் அஞ்சுவர். பார்கவன் ஆட்சி பெற்றதால் அதிர்ஷ்டகரமான வஸ்துகள் எல்லாம் கிடைக்கும். திருமணம் கூடிவரும். பிணிகள் அகலும். மேற்குத் திசை லாபமானது. செய் தொழில் விருத்தி யுண்டு. வெள்ளிக்கிழமைகளில் குடும்பத்தில் மடிந்தவர்— குல தெய்வங்களுக்குப் பூஜை செய்ய 27 நாள்களில் துயரம் யாவும் நீங்கி நன்மையோங்கும். இது உத்தமம்.

## ஆயில்யம்

ஆயில்யம் ஆருடம் உதித்ததாலே
அப்பனே நினைத்ததெலாம் தடங்கலாகும்
நோய் நீங்கும் சண்டைவரும் தெண்டமுண்டு
நும்பெண்டு பிள்ளைதனைப் பிரிவாய் நீயும்
ஆயதொரு பொருளிழப்பால் மனஞ்சலிக்கும்
அடுத்தவர்க்கு உன்பேச்சு விஷமாய்க்காணும்
தூயநவக் கிரஹங்கள் பூஜைசெய்து
துயரகற்று கொடுமையது விலகிப்போகும்

ஆயில்ய நட்சத்திரம் ஆருடமானதால் எண்ணங்கள் ஈடேறா. குடும்பத்திலும், நண்பரிடமும் பகை ஏற்படும். பொருள் விரையமும் பலவிதத்தில் ஏற்பட்டு மனக்கவலை தரும், இடம் மாற்றிச் செய்யும் பெண்டு பிள்ளைகளைப்

பிரிய நேரிடும். சிறிய அளவிலான பிணியும் பெரிய அளவில் தொல்லை தரும். பேச்சு விஷமாகப் பிறருக்குத் தோன்றும். 30 நாள்கள் கழிந்தால் நன்மை. இது மத்திபம்.

## மகம்

உந்தனுக்குக் கிரகங்கள் பொல்லாதப்பா
நொந்திடுவாய் ஆருடம் மகமேயானால்
உன்னுடை பந்துக்களும் பகைப்பாருன்னை
உன்பொருளே உன்விரோதி யாகிப்போகும்
மைந்துடைய கிரகமெல்லாம் விலகிநிற்கும்
மனையினிலே சண்டை பொருள்விரயம் நோயே
நொந்திடுவாய் தொழில்முறையில் நஷ்டத்தாலே
மண்டலத்தில் சீர்பெறுவாய் சிவனேசாட்சி

மக நட்சத்திரம் ஆருடமானதால் நல்ல கிரகங்கள் எல்லாம் நீசமுற்றதால் பல துன்பமும் நண்பர்களிடம் பகையும் சுற்றத்தாருடன் மாறுபடுதலுமுண்டாம். தம் பொருளே தமக்குப் பகையாம். குடும்பத்தில் கலகமுண்டு. நோயினால் பொருள் விரயம். தொழிலால் நஷ்டம், மனக்கவலை இத்யாதி ஏற்படும். வறுமை மனக்கலக்கத்தை உண்டு பண்ணும். தெய்வங்களும் பகையாகும். 40 நாள்களுக்குப் பின் நன்மையுண்டு. இது முக்கண் சிவபெருமான் சாட்சியாகப் பொய்யாகாது.

## பூரம்

பூரமது ஆருட மாகவந்தால்
புரிந்திடுவர் சதி சாட்சி கூறிடுவார்
வீரமுடன் செய்ததெலாம் நஷ்டமாகும்
விரும்பியதாய் மனைவிமக்கள் பகையுண்டாகும்
கோசாரத் திசைபோல கலியுங்காணும்
கோபத்தா லிடமாறச் செய்யுமுண்மை
சூட்சுமமாய் மோசமுனைச் செய்வாரப்பா
சுகம்பெறுவாய் திங்களைந்தில் உறுதிதானே

பூர நட்சத்திரம் ஆரூடமாக உனக்கு உதயமானதால், உன் கெட்ட கிரகத்தின் கோசாரத்தால், உனக்கெதிராகச் சாட்சி கூறி மோசம் செய்வர். தொழிலில் அபகீர்த்தியும் நஷ்டமும், காரியத் தடையும், நோய் உபாதையும், இட மாற்றமும் உண்டாம். தாய், பெண்டு பிள்ளைகளும் நிந்திப் பர். ஏமாற்றம் ஏற்படும் 5 மாதம் செல்ல நன்மை.

## உத்திரம்

உத்திரந்தான் ஆரூடம் உதித்ததையா
உந்தன்போல் பாக்யசாலி யாருமில்லை
தொத்துபிணி வறுமை கண்டம் வலுத்திடாது
தொடர்வம்பு ஒழியுமப்பா வடக்கேலாபம்
மெத்தமணம் கூடுமப்பா தனமே சேரும்
மெத்தபகை உறவாகும் தொழிலில் லாபம்
பத்திரண்டு ஒருநாளில் வெளியூர்சேதி
பதமாகக் கேட்பாய் எண்ணம் பலிதமாகும்

உத்திர நட்சத்திரம் ஆரூடமாக உதயமானதால், உன் கோள்கள் உச்சமுற்றிருப்பதால், உலகில் தன்னிகரில்லாது செழித்து வாழ்வாய். வாட்டிய வறுமையும், துயரபடுத்திய பிணியும், பொல்லாத கெண்டாதி தோஷங்களும் ஒழிந்தது. குடும்பச் சண்டை நீங்கும். குடும்பத்தில் திருமணம் நிகழும். பங்காளிகள் சொத்து சேரும், வடதிசை லாபம் நல்கும். பகை உறவாகும். 21 நாளில் வெளியிலிருந்து நல்ல செய்தி வரும். எண்ணம் ஈடேறும், இது உத்தமம்.

## அஸ்தம்

அஸ்தமது உதித்திட்டால் பலிதமில்லை
அளவற்ற நிந்தனைகள் சேருமப்பா
இஷ்டமுடன் வலுச்சண்டை வம்புசேரும்
எடுத்திட்ட வழக்கெல்லாம் தோற்குமப்பா
கஷ்டமே குடும்பத்தில் கலகம் காட்டும்
நட்டமப்பா தொழில்முறையில் பழியும்கூடும்
திஷ்டியுள்ள இருமாதம் தீர்ந்தபின்னே
தீருமப்பா உந்தனிட கஷ்டந்தானே

அஸ்த நட்சத்திரம் ஆருடமானால் பலவித பழிகள் ஏற்படும். வம்பு வழக்கு, வீண் சண்டை சச்சரவு, வழக்கில் தோல்வி ஏற்படும். செய்தொழிலில் நஷ்டம், பழிமொழி ஏற்படும். இரண்டு திங்கள் செல்ல துன்பம் ஒழிந்து இன்பம் ஏற்படும். இது மத்திபம்.

## சித்திரை

ஆருடம் சித்திரைதான் உதயமானால்
அடுத்தடுத்து துன்பந்தான் அதிகரிக்கும்
சீரான அரசரது பகையுண்டாகும்
சேர்த்தணைத்த பேர்களுமே அவமதிப்பர்
பேரான கன்றுகாலி நட்டமாகும்
பெருங்கபடம் கொடுத்தகடன் கேட்டாயானால்
சீரோடு ஒன்பதுநாள் நவக்கிரகபூஜை
செய்திடவே ஒழியுமப்பா நாள்தோறும் பீடை

சித்திரை நட்சத்திரம் ஆருடமானதால் உனக்குத் துயரத்தின்மேல் துயரமே ஏற்படும். அரசின் பகையுண்டு உன்னால் ஆதரிக்கப்பட்டவர்கள் உன்னை அவமதிப்பார்கள். கால்நடைகள் நஷ்டம். வீடு கட்ட விருத்தியின்மை. கொடுத்தது கேட்டால் அடுத்துவரும் பகை. ஆனாலும் ஒன்பது நாள் நவக்கிரகப் பூஜை செய்ய நன்மையுண்டாம்.

## சுவாதி

உதயமென ஆருடம் சுவாதியானால்
உற்றதெலாம் தரித்திரம் பலநாளுந்தான்
இதமெனவே பிறருக்குச் செய்தநன்றி
இற்றுவிடும் உனைக்கண்டால் விகற்பம்கொள்வார்
கதைபோல பரதேசம் போகச் செய்யும்
கடன்காரர் தொகைபெருகும் தொல்லைநேரும்
நிதமிருந்த மனைவியுனைப் பிரிந்து போவாள்
நின்கொடுமை நீங்கும் மாதம் மூன்றில்தானே

சுவாதி நட்சத்திரம் ஆருடமாக உதயமானதால், சோம்பேறித்தனம், வம்பு, வறுமை, பிறருக்கு நன்றி

செய்யினும் பகையாதல் ஆகியன நிகழும். குடும்பத்தில் பகை கொண்டு ஒருவர் கண் காணாமல் போகவும் நேரும். கடன் தொல்லை தீரும். பெண்டும் பிரிந்து போவாள். மனதில் பலதுயர் குடிகொள்ளு 3 திங்கள் சென்றால் இவை படிப்படியாய் விலகும். இது மத்திபம்.

## விசாகம்

உதயமே விசாகமது காணுமானால்
உன்மனதில் கவலைகுடி கொள்ளுமப்பா
நிதமுமே மனக்கவலை அதிகரிக்கும்
நிட்டூரம் வேதனையே முன்னர்நிற்கும்
இதமான பொன்பொருளும் இழப்பேயாகும்
இல்லாத கலகத்தில் பெயர் கெடுக்கும்
நிதமான கவலையினால் நோயுங் காணும்
தீதேழு வாரம்வரை தெரிகுவாயே

விசாக நட்சத்திரம் ஆருடமாக உதயமானதால் எண்ணம் ஈடேறாது. மனநோயுற்றவன் போலக் கவலையால் திரியச் செய்யும். மனக்கவலை அதிகரிக்கும். பேய் பிசாசுகளின் பயங்கரங்களேற்படும். இடையூறே அதிகமுண்டாகும். நோய்த்துன்பம் மனக்கவலை தரும். பொன்னாபரணங்கள் விரயமாகும். பலரின் தூண்டுதலால் கெட்ட பெயருண்டாகும். 7 வாரத்தில் துன்பம் நீங்கி நன்மையேற்படும். இது மத்திபம்.

## அனுஷம்

அனுஷமே ஆருடம் உதயமானால்
அளவற்ற செல்வமப்பா மனைவிளங்கும்
மணங்கூடும் பரிவாக நோயும் தீரும்
மறைவாகப் போனவர்கள் வரவேநேரும்
மனையிலோர் அறிவுள்ள ஆண்குழந்தை
மல்கிடுமே அதனாலே செழிப்பேயோங்கும்
துணிவடைவாய் இருபத்து மூன்றுநாளில்
துயரகலும் வெற்றிநேரும் இல்லைதீதே

அனுஷம் ஆரூட நட்சத்திரமாக உதயமானதால் பெரியோர்களின் ஆசியும் உதவியும் ஏற்படும், ஏராளமான செல்வமேற்படும். அடைக்கலமென்று அடைந்தவரைக் காக்கின்ற பண்பும் ஏற்படும். குடும்பத்தில் மணம் நிகழும். ஆண் மகவு தோன்றும். நீங்காத பிணியும் நீங்கும். ஊரை விட்டுப் போனவரும் வந்து சேர்வார்கள். குடும்பம் குறை வின்றி நடக்கும். 23 நாளில் உன் துன்பமெல்லாம் நீங்கி நன்மையடைவாய். இது உத்தமம்.

## கேட்டை

கேட்டையது ஆரூடமாக வந்தால்
கேடுதரும் பகையாகும் மனையிலேதான்
வாட்டுமொரு வாதனையும்வறுமை வஞ்சம்
வகையற்று பிறரிடத்தில் பொருளைச் சேர்க்கும்
மீட்டுமொரு வேணகுற்றம் சதியும்நேரும்
மெலிவுற்று தெய்வத்தை நிந்தைசெய்யும்
போட்டபொருள் நட்டமாம் குடிகெடுக்கும்
பேதலித்தே நாளுக்குநாள் சுகமுண்டாமே

கேட்டை நட்சத்திரம் ஆரூடமாதலால் மோசமான பகைவர்களும் குடும்பத்தைக் குலைப்போரின் பழிமொழியும் பிணியின் துன்பமும், நண்பர் வஞ்சகமும், வறுமையும், மனக் கவலையினால் தெய்வத்தை நிந்தித்தலும் நிகழும். உன்னு டைய செல்வத்தையே பெற்றுக் கொண்டாலும் பெரும் மோசடியே செய்வர். வீண்பழிகள் ஏற்படும். ஆயினும், நிதானமாக இருக்கவும். துன்பங்கள் எல்லாம் நீக்கி நாள் தோறும் நவக்கிரகங்கள் நன்மை தரும்.

## மூலம்

மூலமது உதித்ததாலே சுகமுமுண்டு
சூதுடையோர் உறவதனை விட்டுப்போடு
மூலமதாம் ஆதியைநீ நம்பி வாழு
முளுமப்பா அனுகூலம் அதனால் தானே

பூமியினை ஆளுமன்னன் போலே வாழ்வாய்
சேய்பிறக்கும் கடன்தீரும் தெற்கேலாபம்
ஆழுனக்கு தொழில்மேன்மை நிலமும் சேரும்
சேதிவரும் நன்மையுண்டு தெரிகுவாயே

மூல நட்சத்திரம் ஆருடமாக வந்ததால் எண்ணிய எண்ணம் ஈடேறும். தீய நெஞ்சர்கள் உறவு கொண்டு கலக்கமுறுதல் வேண்டாம். சில நாள்களில் இறையருளால் வேண்டிய பொருள்செல்வம் பெறுவாய். குடும்பத்தில் ஒரு பெண் மகவு பிறக்கும். குடும்பத்தில் கடன் தீரும் தெற்குத் திசை லாபம் தரும். செய்தொழில் விளக்கமுறும். நில புலமும் பெருஞ் செல்வமும் நற்சிந்தையும் உண்டாகும். மகிழ்வான செய்திகள் வெளியிலிருந்து கேட்பாய். இது உத்தமம்.

## பூராடம்

தானென்று பூராடம் உதயமாச்சு
தீதில்லா உன்மனதில் தயக்கமாச்சு
ஏனென்ற பெரியார்கள் நேசம்போச்சு
ஏன்றதொரு ஆசை நிராசை யாச்சு
நீகொண்ட பெரியோர்கள் தனமும் போச்சு
நேரிழையால் குடும்பத்தில் கலகமாச்சு
தீதென்ற குறைகள்பல உனக்குண்டாச்சு
தீதெல்லாம் நீங்குமப்பா வருடமொன்றில்

பூராட நட்சத்திரம் ஆருடமாக் உதயமானதால் ஆன்றோர் நேசமும் ஸ்திரியமும் பிரிவும் துன்பமும் நேர்வதால் ஆழ்மனத்தில் கவலையுண்டாம். தீதற்ற பெரியோர்களின் நட்பு போகும். முன்னோர் தேடிய பொருளழியும். ஆசை நிறைவேறாது. ஒரு பெண்ணால் குடும்பத்தில் கலக்கமேற் படும். செய்யத்தகாத குற்றத்தைச் செய்ய நேரிடும். ஒரு வருடம் வரை கவலையே. இது மத்திபம்.

## உத்திராடம்

உரைக்கவொணா உத்திராடம் உதயமானால்
வருத்தமிலை வருடமேழு லாபமுண்டு
உரைத்திடவே குடும்பத்தில் செல்வமோங்கும்
ஒண்பொருளும் பொன்னதுவும் மிகவுண்டாகும்
உருகெடுக்கும் பிணியதுவும் விலகிப் போகும்
உடன்பிறந்தார் பந்துக்கள் உதவியுண்டு
சிறுமையினால் மனைவிட்டு நீங்கினாரும்
சின்னாளில் வீடுவந்து சேருவாரே

உத்திராட நட்சத்திரம் ஆருடமாக உதயமானதால் உனக்கு 7 வருடம் வரை நல்ல யோகமே. பொன்னாபரண சேர்க்கை, மிகுந்த செல்வாக்கு, மனைச் சிறப்பு, உடன்பிறந்தாரின் ஒத்துழைப்பு, சுற்றத்தார் உதவி இவை உண்டாகும் பிணி உடன் அகலும். வறுமையால் சில நாள்களுக்குமுன் வீட்டைவிட்டுச் சென்றோரும் வந்தடைவர். பத்து தினங்களுக்குள் எல்லாத் துன்பங்களும் நீங்கும்.

## திருவோணம்

தீரவே திருவோண முதயமானால்
தெளிவாக வெற்றியுண்டு சிக்கலில்லை
நேரவே வெளியூரும் நன்மைசேர்க்கும்
நிர்ப்பயமாய்ப் பிரயாணம் செய்யநன்றாம்
தீரமாய் வாணிபமே நடத்த நன்றாம்
சிறுவர்களைப் பள்ளிதனில் அமர்த்தல் நன்றாம்
கோரவே உந்தன்குல தெய்வந்தன்னை
குடும்பமே செழித்தோங்கும் குவலயத்தே

திருவோண நட்சத்திரம் ஆருடமாக உதயமானதால் எண்ணிய எண்ணம் ஈடேறும். குடும்பத்தில் சிக்கலில்லை. வாணிபத்திற்காகச் செய்யும் வெளியூர்ப் பயணம் லாபகரமானது. க்ஷேத்ராடனம் நன்மை தரும், தொழில் விருத்தியுண்டு. சிறுவர்கள் கல்வி ஞானம் சிறக்கும். உன்னுடைய குலதெய்வங்களை மறவாமல் வெள்ளிக்கிழமையன்று பூஜை செய்ய நன்மை.

## அவிட்டம்

அவிட்டமது ஆருடமாக வந்தால்
அப்பனே வெகுநாளாய் துயர்க்குள்ளானாய்
தெவிட்டாத பந்துகட்கும் எதிரியானாய்
தெளிவில்லாத் துட்டர்களால் துயரம் ஏற்றாய்
பணம்தேடப் பாடுபட்டும் நட்டமானாய்
பாழான நோயாலே பதறிப்போனாய்
குணவானாம் சுக்கிரனும் பார்வை பெற்றான்
கொடுமையெலாம் இனிவிலகும் கலங்கிடாதே

அவிட்டம் நட்சத்திரம் ஆருடமாக உதயமாகில், நீ வெகு காலமாக இடர்பட்டிருக்கிறாய். உற்றார் உறவினர் களுக்குப் பகையானாய். பல தீயவர்களின் துன்பத்தால் மனக்கலக்கமும் வேதனையுமுற்றாய். தொழிலில் விரயமே கண்டாய். ஏழாவது கேந்திரத்தில் சுக்கிரன் பார்வை பெற்ற தால் உன் கவலைகள் நீங்கி நலம் பெறுவாய். அச்சம் வேண்டாம். இது உத்தமம்.

## சதயம்

காணாது போனபொருள் கருத்தாய்க் கிட்டும்
கலங்காதே சதயமே உதயமானால்
ஆனாத நிலபுலமும் கன்றுகாலி
அதனோடு பயிர்செழிக்கும் தனமுமோங்கும்
தேனாக எண்ணமெலாம் பலிக்குமப்பா
தேர்வான உத்யோகம் கிடைக்கலாகும்
நாணாதே காரியங்கள் நடக்கலாகும்
நாளுக்குநாள் குடும்பம் தழைக்குமாமே

சதய நட்சத்திரம் ஆருடமாக உதயமானதால் சொப்பனத்தில் கண்ட பொருளானாலும் கிடைத்தே தீரும். நிலபுலம், கால்நடைகள் பால் பாக்கிய விருத்தி யுண்டாகும். வீடு கட்டுதல், பயிர் விளைத்தல் இவற்றால் வெகு தன லாபமுண்டு. உத்தியோக மேன்மை குடும்பத்தில் சுப காரியங்கள் நிகழ்தல் இனிது நிறைவுறும். பிணியகலும்

எண்ணியன ஈடேறும். குடும்பக் கவலை நாளுக்கு நாள் குறைந்துபின் நீங்கும்.

## பூரட்டாதி

தப்பாது பூரட்டாதி உதயமானால்
தப்பாதுன் வாக்கதுவும் செல்வமோங்கும்
எப்போதும் உனக்கு இடர்விளைத்த பேர்தாம்
எண்ணரிய நோயாலே மடிவாரப்பா
எப்போதும் பொன்பொருளும் குவியுமப்பா
ஏன்றதொரு பெண்ணாலே குலம்தழைக்கும்
தப்பேதும் இல்லையப்பா பதினேழுநாளில்
தழைத்துநீ நீடூழி வாழ்வாயப்பா

பூரட்டாதி நட்சத்திரம் ஆரூடமாக உதயமானதால் உனக்குப் புகழோங்கும். வாய்ச்சொல்லில்உறுதியும் நேர்மையும் உண்டாகும். தனலாபம் வாய்க்கும். கேடு சூழ்ந்தவர்கள் கெடுவர். பொன்னும் பொருளும் ஆபரணச் சேர்க்கையுமுண்டாகும். மனைவியினால் மனைமாட்சி பெறும். கண்டம் விலகும். பிணிநீங்கும். ஆயுள் விருத்தியாகும் எண்ணம் பலிக்கும், உத்தமம்.

## உத்திரட்டாதி

உத்தமமே உத்திரட்டாதி உதயமானால்
உயர்வான தொழில்பெருகும் சுகமு மோங்கும்
இத்தினமே குருப்பார்வை ஆதலாலே
ஏன்றதொரு துயர்நீங்கும் கலகம் நீங்கும்
உத்தமமாம் மணம்கூடும் மகப்பேறாகும்
உயர்ந்ததொலைச் செய்திதரும் பிணியும் தீரும்
எத்தினமும் கருணைபொழி கந்தநாதன்
இன்னருளால் நீடூழி வாழி வாழி

உத்திரட்டாதி நட்சத்திரம் ஆரூடமாக உதயமானதால் பன்னிருகை வேலவனின் பேரருளினால் இன்பம் பொங்க

வாழுவாய். தொழிலானது பலமும் பெருக்கமும் கொண்டு தனலாபத்தைத் தரும். மனைமாட்சியேற்படும். தவிர குரு பஞ்சம ஸ்தானத்தைப் பார்ப்பதால் வீண் அலைச்சலும் கவலைகளும், துயரமும் குடும்பக் கலகமும் இல்லாதொழி யும். குடும்பத்தில் திருமண காரியங்கள் கூடிவரும். புத்திரப் பேறு ஏற்படும். வெளியூர்ச் செய்தி நன்மைதரும். பிணிகள் அகலும். கெண்டாதி தோஷமில்லை. இது உத்தமம்.

## ரேவதி

வாழ்வருளும் ரேவதியு முதய்மானால்
வல்வழக்கு வம்பேது விலகிப் போகும்
தாழ்ந்திருந்த வாணிபந்தான் இதற்குமேலே
தனலாபம் ஓங்கிடவே விருத்தியாகும்
சூழ்ந்திருக்கும் உன்றன் குடும்பந் தன்னில்
சூழ்ந்ததுமே சுகமதுவும் துயரம் நீங்க
ஏழையென நீயிருந்த போதும் இனிமேல்
இடர்நீங்கிச் சுகம்பெறுவாய் இனிமைதானே.

ரேவதி நட்சத்திரம் ஆருடமாக உதயமானால் குடும்பச் சிக்கல்கள் விலகும். தாழ இருந்த தொழில் மேலோங்கும். உன் கஷ்டங்களெல்லாம் ஒரு சில நாள்களில் நன்மையாய் முடிந்து நலம் தரும். எது செய்யினும் இன்னல் இல்லை. எண்ணம் ஈடேறும். இது உத்தமம்.

நட்சத்திர யோக சாஸ்திர பலாபலன் முற்றிற்று.

